# ஹரிதாஸ ஹ்ருதய

## (பாகம் 3)

## சிராவண & பாத்ரபத மாதத்திற்கான ஹரிதாச சிந்தனைகளின் தொகுப்பு


கன்னடத்தில் :

திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார்
பெங்களூரு

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஹரிதாஸ ஹ்ருதய
## (பாகம் 3)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீப்ராணேஷ தாஸரின் ஆராதனை நாளான
02-10-2022 அன்று வெளியிடப்பட்டது.

**நன்றி! நன்றி!!**

ஹரிதாஸ ஹ்ருதய - பாகம் 3 புத்தகம் வெளியிட பொருளுதவி செய்த கோயமுத்தூரைச் சேர்ந்த ஒரு ஹரி பக்தருக்கு, நமது நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

## ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

## பொருளடக்கம்

## முன்னுரை

ஹரிதாச சாகித்யம் ஆத்யாத்ம / லௌகிக வாழ்க்கையின் பொருள் ஆகியவற்றை விளக்குவதாக இருக்கிறது. ஆகவே இன்றுவரை அந்த சாகித்யம் அழியாமல் வருகிறது. உடலில் இருக்கும் இதயம் எப்படி ரத்தத்தை சுத்தமாக்கி நாம் வாழ வழி செய்கிறதோ, அது போல இந்த 'ஹரிதாச ஹ்ருதய' நம் இதயத்தில் இருக்கும் அழுக்குகளை சுத்தமாக்க உதவுகிறது. இதில் தினத்திற்கு ஒன்று என்று சிந்தனை இருக்கிறது. இதில் இருப்பது விஷயங்களின், தத்வங்களின் சாரம் / சுருக்கம் மட்டுமே.

ஹரிதாஸ ஹ்ருதய என்னும் இந்தப் புத்தகத்தை கன்னடத்தில் எழுதியவர் திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார் அவர்கள். ஒரு ஆண்டில் வரும் 360 நாட்களில், நாளுக்கு ஒன்று என மொத்தம் 360 சிறிய கட்டுரைகள் இதில் உள்ளன. சைத்ர & வைஷாக மாதத்தின் கட்டுரைகள் பாகம் 1ல் வெளிவந்தன. இந்த பாகம்-2ல் ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களின் கட்டுரைகள் உள்ளன.

ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள், பண்டிகை, விரத நாட்களில் - அந்தந்த ஹரிதாசர்களைப் பற்றி / பண்டிகை விரதங்களைப் பற்றி மற்ற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் இதில் உள்ளன. மத்வ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் பற்றியும் ஹரிதாசர்கள் பாடியுள்ளனர். அவை அனைத்தும் இந்தப் புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்த முழுப் புத்தகத்தையும் படித்தால், ஹரிதாசர்களின் கருத்துக்களின் வழியே, நம் மத்வ சித்தாந்த தத்வங்களை சுலபமாக அறியலாம்.

அனைவரும் இந்தப் புத்தகத்தை படித்து, அடுத்து வரவிருக்கும் பாகங்களையும் வாங்கிப் படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அனைவருக்கும் ஹரிவாயு குரு ஹரிதாசர்களின் அருள் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**15-06-2022** **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**சிராவண சுத்த ப்ரதிமை**

**முத்துப் போன்ற வாக்கு**

நாலிகெய மேலே ஹரிநாம
எல்லர மேலெ தய மாடபேகு
பாப ரஹிதநாகிரபேகு
காமலோபகளன்னு த்யஜிஸபேகு
மத்வராயரன்னு யாவாகலு ஸ்மரிஸபேகு
தொரதத்தரொளகெ த்ருப்தனாகிரபேகு
ப்ரபஞ்சதல்லி த்ருப்தியிந்திரபேகு || --ஸ்ரீவியாசராஜர்

இங்கு சொல்லப்பட்டிருக்கும் ஒவ்வொன்றும் முத்துப் போன்ற சொற்கள். சாதனைக்கு வழியாகும். வாழ்க்கையில் எது தேவை; எது தேவையில்லை என்பதை சாரமாக சொல்லியிருக்கிறார். இது ஸ்ரீமதாசார்யர் சொல்லிய வாக்கின் மொழிபெயர்ப்பே ஆகும்.

ஸ்வாத்யாய ஸ்தத்ய விக்ஞானம் விஷ்ணு பக்திர்விராகதா
நிஷித்தகர்மணாம் த்யாகோ விஹிதஸ்ய சதா க்ரியா
சதா விஷ்ணுஸ்ம்ருதிஸ்ச ...

ராஜர் சொல்லியிருக்கும் ஒவ்வொரு வார்த்தையையும் பின்பற்றினால், அது வாழ்க்கையை பவித்ரமாக்கி, நாம் சத்கதி பெறுவதில் சந்தேகமில்லை. சாஸ்திரங்களில் நிரூபிக்கட்ட கொள்கைகளின் சாரம் இதுவே. தர்மத்தின் உட்பொருள் இதுவே. எப்போதும் ஹரி நாமஸ்மரணை, விலக்கப்பட்ட செயல்களை செய்யாதிருத்தல், அரிஷட்வர்கங்களை கட்டுப்படுத்துதல், விரக்தி -- இவை இருந்தால், அதுவே ஆசார்ய மத்வரின் சித்தாந்தங்களைப் பின்பற்றியது போலாகும். என்றால் அவரது ஸ்மரணை எப்போதும் நமக்கு இருக்கவேண்டும். பொதுவாக மனிதனுக்கு திருப்தி இருக்கவேண்டும் என்கிறார். 'தேன த்யக்தேன புஞ்சீதா:' என்பது போல அவன் கொடுத்ததில் மகிழ்ந்து அதிலேயே வாழ்க்கையை நடத்தி சாதனைகளை செய்து சத்கதியின் வழியை பற்றவேண்டும். இது ஒருவரை முன்னேற்றுவதோடு இல்லாமல், ஒரு சமூகத்தையே முன்னேற்றும். ராஜர் தெரிவிக்கும் ஒவ்வொரு

வாக்கும் நினைவில் இருக்கட்டும். அனைவரின் மனதையும் தொடும் வண்ணம் ராஜர் சொல்லிய வாக்கு:

பே பே மனவெ நாசத தனுவே
நீச விருத்திய பிட்டு நெனெ கண்ட்யா ஹரிய || -- ஸ்ரீவியாசராஜர்

**சிராவண சுத்த த்விதியை
எப்போதும் ஹரி ஸ்மரணை இருக்கட்டும**

ஹரிஸ்மரணே மாடோ நிரந்தர |
பரகதிகெ இது நிர்தார || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பிறந்து வந்த மனிதனின் கடமை, நிரந்தரமாக ஸ்ரீகிருஷ்ணனின் ஸ்மரணையை செய்வதே. ஸ்ரீஹரியே ஜீவனின் உயிர். அதற்கே தாசர் கண்டிப்பான குரலில் சொவ்வது:

ஹரிய நெனெயத நரஜன்மவேகே நர
ஹரிய கொண்டாடத நாலிகேயேகே || --ஸ்ரீபுரந்தரதாசர்

மனிதனாக வந்த ஜீவன் நிரந்தரமாக ஜெபிக்கவேண்டிய திவ்ய மந்திரம் ஸ்ரீஹரியுடையது. ஸ்ரீமன் மத்வாசார்யர் சொல்வது;

ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:

ஸ்ரவண, மனன, நிதித்யாஸன – ஸ்ரவண (கேட்டல்) இதுவே முதலில். பின்னர் இதிலிருந்து ஸ்மரணை (நினைத்தல்). இது ஸ்ரீஹரியைப் பற்றியே இருக்கவேண்டும். ஏனெனில்,

ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி:

ஸ்ரீபுரந்தரதாசர்: ஹரியே சர்வோத்தம ஹரியே பரதேவதே |
ஹரி சர்வ விஷ்வமயம் ஜகது || என்கிறார்.
இன்னொரு இடத்தில்: கலியுகதொளு ஹரி நாமவ நெனெதரெ
கலி கோடிகளு உத்தரிசுவுது || என்றார்.

இத்தகைய ஹரி நாமஸ்மரணையை செய்யாதவன், இருந்தால் என்ன, இல்லையென்றால் என்ன.

ஹரி ஸ்மரணே இல்லதிரே பாளி பதுகிதரேனு |
நரஜன்மதலி ஜனிஸி பலவேனு ஹரியே || என்றார்.

ஹரி நாமஸ்மரணையுடன் ஸ்ரீஹரியைப் பற்றிய சிறப்பு குணங்கள், ஹரிகதையைக் கேட்பது கட்டாயம் என்கிறார்.

ஹரிகதா ஸ்ரவண மாடோ | பாடோ |
ஹரிகதா ஸ்ரவண மாடோ | பத வைகுண்டக்கிது நோடோ ||

வேறெதும் இல்லையென்றாலும் பரவாயில்லை. ஆனால்,

ஹரிசர்வோத்தமனெந்து ஸ்மரிசத ஜனர சங்க பேட || என்றார்.

கலியுகத்தில் ஹரி நாமஸ்மரணை அனைவருக்கும் கட்டாயம். எழும்போது, படுக்கும்போது, நடுவில் முழிப்பு வரும்போது, எப்போதும் நம் மனதில் ‘ஹரே ராம ஹரே ராம’ என்று அவன் நினைவு வரவேண்டும்.

**சிராவண சுத்த த்ருதியை**

**பார் - பாடு - செய்**

விஜயதாசர் சஜ்ஜனர்களுக்காக சொல்லிய விஷயங்கள் பல. தான் சத்கதியைப் பெறுவது மட்டுமல்லாமல், தம்மை நம்பி வந்தவர்களையும் கடைத்தேற்றும் குணம் கொண்டவர் இவர். இது அவரது கருணை இல்லாமல் வேறென்ன? சாதகர்களுக்கு சாதனையின் பல விதங்களை, தன் ஆறுதலான வாக்குகளினால் தெரியப்படுத்தி, அவர்களை மேலும் நல்வழியில் ஈடுபடுத்தி அவர்களுக்கு அருளினார். பூஜ்ய-தாசர் சொல்வதைக் கேட்போம்.

ஹரிதாசரொடனாடு ஹரியங்க்ரி யுக்ம நோடு
ஹரியெந்து கொண்டாடு ஹரிநாம ஹாடி பாடு
ஹரிப்ரஸாதவெ பேடு ஹரி சேவெயன்னு மாடு
ஹரிகெ கரவ நீடு ஹரிய பிடதெ காடு
ஹரிய பொகளி பாடு ஹரிகெ மனஸு கொடு
ஹரிகொப்பிஸு ஈ பேடு ஹரி த்வேஷிகள பிடு
ஹரித்யானதல்லி கொடு ஹரிகருணத ஜோடு

ஹரியதந்தெ தோடு ஹரிகரிகெ ஓடு
ஹரியல்லி ரதியிடு ஹரிவிட்டலன்ன
ஹரி எந்தரெ ஈ நாடு ஹருஷபடுவது நோடு
ஹரிய போகதெ கேடு || -- ஸ்ரீவிஜயதாசர்

அனைவருக்கும் புரியட்டும் என்று தத்வவாதத்தை மிகவும் எளிதான வாக்கியங்களில் தாசர் கூறியிருக்கிறார். இந்த வாக்கியங்கள் அனைவரின் மனம் - இதயங்களில் ஆழமாகப் பதியவேண்டும். இந்த குணங்களை மனதில் ஏற்றி, எளிய வாழ்க்கை வாழ்ந்து, ஸ்ரீஹரியின் பிரசாதத்தை வேண்டுங்கள் என்கிறார். ஏனெனில், அன்று ஸ்ரீமதாசார்யர் கூறியது இதுவே - 'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு; ஹரிரேவ ஜகத் பித்ரு மாத்ரு கதி:'

ஆசார்ய மத்வரின் வாக்கினை தாசர் மொழிபெயர்த்து கூறியிருக்கிறார். அனைத்துமாகி, அனைவருக்கும் அருளும் ஸ்ரீஹரியை விட்டு வேறொருவரை வணங்குதல் தவறு. பிரம்மாதி சகல ஜீவருக்கும் சக்தியை கொடுப்பவன் அவனே. 'பேடிதரெ என்னொடெயன பேடுவே' என்கிறார் புரந்தரதாசர். தாசர்கள் நாம் செய்யவேண்டியதின் பட்டியலையே நம் முன் வைக்கின்றனர்.

**சிராவண சுத்த சதுர்த்தி**

**தாசன் இவ்வாறு இருக்கட்டும்**

ஹரிதாச சாகித்யத்தில் காணும் உண்மையான அம்சம் என்னவெனில், தாம் நிஜமான தாசனாக இருந்து, மற்றவர்களுக்கும் அந்த வழியைக் காட்டுவதே. இப்படியாக இன்று வரை இந்த பரம்பரை வளர்ந்து வந்திருக்கிறது. இதற்கு ஒரு சிறந்த உதாரணம் - பிரசன்னவேங்கடதாசரின் பாடல். இதில் சஜ்ஜனர்கள் வாழ்க்கையில் எப்படி இருந்து, நிஜ தாசர் என்றுகொண்டார் என்பதை பார்க்கிறோம்.

ஞானியாகபேகு அஞ்ஞான நீகபேகு தத்வ
ஞானதிந்திரபேகு முக்தி தானே ஆவாகக்கு ||ப||

'நஹி ஞானேன சத்ருஷம் பவித்ரமிஹவித்யதே', 'ஞானேனைவ பரம் பதம்' என்று சொன்னதில் மொழிப்பெயர்ப்பே தாசரின் வாக்குகள். இங்கு இருக்கும் தாசரின் பாடலைப் புரிந்து பின்பற்றுதலில் வாழ்க்கை வாழ்வதன் உண்மையான பலன் இருக்கிறது.

அப்ஜாஜனன்னு பாதாப்ஜ நம்பிரின்னு கு
ஷப்தகுந்திரண்ண பவாப்தி தாடிரண்ண ||1||
மாடி சாதுசங்க பிடி கரள ஹங்க நீவு
நோட அந்தரங்க கை நீடுவனு ரங்க ||2||
த்யாகபோக சர்வ ஸ்ரீஹரிகெ ஒப்பிஸிருவ ஆ
யோகியன்னு கரெவ ஸ்ரீ நாகஷயன ஹொரெவ ||3||
தித்தனோடி வர்ம அஸாத்ய ஷர்ம நர்ம பே
கித்து பிடி அதர்ம நின்னது ஷுபகர்ம ||4||
தாசர ஜீவன பக்தி போஷக பாவன ஸ்ரீ
ப்ரசன்னவேங்கட ப்ரசன்ன அபிலாஷே சஜ்ஜனே தன்ய ||5||

நம்முடன் சஜ்ஜனர்களும் சத்கதியை அடையவேண்டும் என்னும் நல்ல இதயம் அவருடையது. இதுவே நம் எண்ணமும் ஆகவேண்டும். சாதுகளின் நட்புடன், அனைத்து சத்காரியங்களையும் பின்பற்றி, அதை ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தல் ஆகட்டும். ஸ்ரீமதாசார்யர் கூறியது:

சர்வோத்தமம் ஹரிம் ஞாத்வாய ஏவம் பக்திபூர்வகம் |
ஜபத்யானாதிபிர் நித்யம் பூஜயேன்னாஸ்ய துர்லபம் ||

ஸ்ரீஹரியின் மகிமைகளை அறிந்து, பக்தியுடன் செய்யப்படும் எந்த காரியமும் நற்பலன்களையே கொடுக்கும். இப்படி செய்தால், நாம் கேட்காத முக்தியும் நம்மைத் தேடி வரும் என்கிறார் தாசர். அதாவது:

ஞானியாகபேகு அஞ்ஞான நீகபேகு | சத்சங்கவிடிது சர்வோத்தமனெ
கதியெந்து | நிஷ்டெ அர்சிஸு கட மனுஜ || -- பிரசன்னவேங்கட தாசர்.

## சிராவண சுத்த பஞ்சமி பண்டிகைகளின் உட்பொருள்

பண்டிகை என்றாலே மகிழ்ச்சிதான். உற்றார் உறவினர்களின் சங்கமம். இனிப்புகளின் வரிசை. அரட்டை விளையாட்டுகளில் நேரம் போக்குதல். எந்த காரணத்திற்காகவாவது வீட்டில் ஹரிதினங்களைக் கொண்டாடுதல், ஹோமங்களை செய்தல், ஆகியன நடக்கும்போது, பிராமண சுமங்கலிகளுக்கு அன்னதானமிடும்போது, ஞான காரியங்கள் நடக்கும்போது - அந்த பண்டிகையின் நற்பலன் கிடைக்கின்றது. ஆனால் அனைத்தையும்விட, இந்த பண்டிகைகள் எதற்காக என்று ஹரிதாசர்கள் விளக்குகின்றனர். ஸ்ரீவிஜயதாசர் பண்டிகைகளைப் பற்றி கூறுவதாவது:

காமக்ரோதங்களு பிடுவுதே ஹப்ப
நேம நிஷ்டெகள மாள்வுதே ஹப்ப
காமன உபஹதிகெ அஞ்சுவுதே ஹப்ப
காமுக ஜனகள பிடுதிப்புதெ ஹப்ப
பூமியொளகெ ஞானியாகுவுதே ஹப்ப
ஸ்வாமி ப்ருத்ய நியாய திளியுவுதே ஹப்ப
ஸ்ரீமாருதி மதவ ஹாரிபுதே ஹப்ப
வ்யோம கங்காஜனக விஜயவிட்டலன
தாமவ பயஸுவதெ தரெயொளு மஹாஹப்ப || -- ஸ்ரீவிஜயதாசர்

பண்டிகை விரதங்களை செய்யும் முன்னர், மனிதனிடம் இருக்கவேண்டிய குணங்களின் பட்டியலைக் கொடுத்து, இவற்றை பின்பற்றினால் அதுவே நிஜமான பண்டிகை என்றார். ஏனெனில் இந்த நடைமுறை பண்டிகைகளைக் கொண்டாடுவது, இந்த குணங்களைப் பெறுவதற்காகவே ஆகும். இப்படி வாழ்க்கையில் வரும் பண்டிகை, விரதம், உபவாசங்களை செய்வது, நம் அகத்தூய்மைக்காக. அதிலிருந்து ஞானம் பெறுதல். ஞானத்தினால் மட்டுமே புருஷார்த்தங்கள் கிடைப்பது. 'ஞானேனைவ பரம் பதம்' - பூமியில் ஞானியாவதே பண்டிகை என்கிறார். அப்போது மட்டுமே ஸ்ரீஹரியின் அருளுக்கு பாத்திரராகி அவனின் பிரசாதத்தினால்

அனைத்தும் கிடைக்கும். எதையும் பின்பற்றும்போது, இலக்கை மறக்காமல், அதற்காக செய்கிறோம் என்று சிந்தித்து, பின் அவற்றை செய்யவேண்டும் என்று தாசர் கூறுகிறார். நம் சிந்தனைகள் சாஸ்திரோக்தமாக இருக்கவேண்டும். நடைமுறையில் இருக்கும் பண்டிகைகளை பின்பற்றியவாறு, அதன் உட்பொருளையும் புரிந்தவராக இருங்கள் என்கிறார் தாசர். அப்போதே பண்டிகைகளைக் கொண்டாடியதன் பலன் கிடைக்கிறது.

**சிராவண சுத்த சஷ்டி**

**நிஜமான பண்டிகை**

அனைவரும் அறிந்தாற்போல, ஹரி குருகளின் பெயரில் கொண்டாடுவதே பண்டிகை. உற்றார் உறவினர்களுடன், குரு-பெரியவர்களுடன், நண்பர்களுடன் கூடி, நடைபெறும் கொண்டாட்டம். இந்த நேரத்தில் நடைபெறும் ஞானகாரியங்கள், ஹோம யாகங்கள் என அனைத்தும் சரிதான். ஆனால், இன்னும் சில முக்கியமான விஷயங்கள் உள்ளன என்கிறார் தாசர். கண்டிப்பாக அனைவரும் பின்பற்ற வேண்டிய குணங்களின் பட்டியலை இடுகிறார்.

ருணரூபவாகத சம்சாரவு ஹப்ப
குணவந்தனாகி சஞ்சரிசுவதெ ஹப்ப
கனசீலி ஹணவன்னு பயசதிப்பதே ஹப்ப
மனவாச காயக படதனதெ ஹப்ப
வனஜனாபன நோடி பாடுவுதே ஹப்ப
தின ப்ரதிதின சத்கர்மாசரணெ ஹப்ப
மணிகர்ணிகெயல்லி தேஹத்யாகவே ஹப்ப
மனெ நெரெஹொரெ நோடி பளலதிப்பதெ ஹப்ப
அனிமிஷ ஜாகர ஹரிவாஸரவே ஹப்ப
தனுவிகெ வ்யாதெ பாரத்தொந்தெ மஹாஹப்ப
சினுமய மூருதி விஜயவிட்டல ரேயன
மனசினொளனுதின ஈக்ஷிஸுவதே ஹப்ப || -- ஸ்ரீவிஜயதாசர்

இந்த சுளாதியில் தாசர் பண்டிகையைப் பற்றி பல்வேறு விஷயங்களை பட்டியலிடுகிறார். இன்னும் சிலவற்றைப்

பார்ப்போம். 'ராக்ஷசரந்தே திருகுவனந்தெ । துர்பாக்யவல்லதெ ஹப்பவெனிசுவதெ' என்றார்.

தண்டிஸி குருகளிகெ எரகுவுதெ ஹப்ப
தந்தெ தாயிகளிகெ அனுகூலவே ஹப்ப
காந்து சஜ்ஜனரிகெ நுடியதிப்பதெ ஹப்ப
பந்த அதிதிகள பூஜிசுவதே ஹப்ப
இந்து நாளெகெ எந்தூ சிந்தெ பிடுவதே ஹப்ப
நிந்தெ பாரதந்தெ பாளுவதெ ஹப்ப
கேளுவ ஹரிகதா ஸ்ரவணவே தொட்ட ஹப்ப
ஹாளு ஹரடே பிட்டு ஹொத்துகளியுவதெ ஹப்ப
தம்பதிகளு ஏகவாகிப்புதே ஹப்ப ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

**சிராவண சுத்த சப்தமி**

**மத்வர் நிறுவிய சித்தாந்தம்**

ஒப்ப ஆசாரியனு தெய்வவே இல்லவெந்தா
ஒப்ப ஆசாரியனு தெய்வகெ எண்டுகுணவெந்தா
ஒப்ப ஆசாரியனு நிர்குண நிராகார
நிரவயவனெந்தா, கடெயலி தானே தெய்வவெந்த
ஒப்பரு வேதார்தவரிது அரியரு
ஒப்ப மத்வாசார்யரே புரந்தரவிட்டலா
நொப்பனெ தெய்வவெந்து தோரிகொட்டவராகி ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

சஜ்ஜனர்களை கடைத்தேற்றுமாறு கூறிய ஸ்ரீஹரியின் ஆணையை ஏற்று, தரையிறங்கி வந்த ஸ்ரீமதாசார்யர், தத்வ சாஸ்திரங்களை போதித்தார். இதற்கு முன் இருந்த 21 மதாசார்யர்களை கண்டித்து தத்வவாதத்தை நிரூபித்தார்.

ஸ்ரீபுரந்தரதாசர், ஸ்ரீமத்வருக்கு முன் இருந்த சித்தாந்தங்களைக் குறித்து, அவை பரப்பிய விஷயங்களைப் பற்றிய சாரத்தை தெரிவித்து, இவை நம் ஆதாரங்களுக்கு எதிரானது என்று வலியுறுத்துகிறார். முதலில் நாஸ்திக வாதமான சார்வாக, பௌத்த, ஜைனர்களின் சித்தாந்தங்கள் பின்னர் விசிஷ்டாத்வைத அத்வைதிகளுடையது. அவற்றிலிருக்கும் குற்றம் குறைகளை தெரிவித்து வேதங்களுக்கு சரியாகப் பொருந்தி வருகிற சத்

சித்தாந்தத்தை சொல்லி ‘மத்வமதத சித்தாந்தத பத்ததி பிடபேடி பிட்டு கெடபேடி’ என்று போதிக்கிறார். ஹரி சர்வோத்தமத்வத்தை மற்றும் இதர தத்வங்களை சொல்லியவாறு:

ஹரி பரதேவதெ எம்ப ஞானவே ஞான
ஹரியடிகளன்னெதுவ முகுதியே முகுதி
ஹரி விரஹித ஞான மித்யாஞான
ஹரி விரஹித பகுதி மாதின பகுதி
சிரி மத்வாசார்யரே குருகளு த்ரைலோக்யக்கெ
புரந்தரவிட்டலன தோரிதவராகி || -- ஸ்ரீபுரந்தரதாசர்

’அந்த்யே சித்தஸ்து சித்தாந்தம்’ என்று கோஷித்து, வாதிராஜர், ஸ்ரீமதாசார்யரினால் நிறுவப்பட்ட, வேதவியாசருக்கு சம்மதமான சித்தாந்தம் என்கிறார். இதையே தாசர்:

வேத சாஸ்திரகளிந்த மாயிகள கண்டிஸி
ஸாதிஸி ஹரியெ சர்வோத்தமனெந்தெந்து
மோதபரிதவாத திவ்ய சாஸ்திரவ மாடித
மோததீர்த்த புரந்தரவிட்டலன தாஸ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

**சிராவண சுத்த அஷ்டமி**

**சர்வகர்த்ரு ஸ்ரீஹரி**

ஜடப் பொருட்களிலிருந்து பின்னனான (வேறுபட்டிருக்கும்) ஸ்ரீஹரி, அந்தப் பொருட்களிலிருந்து அவற்றின் இருப்பு / அழிப்பை செய்கிறான். அவற்றின் குணங்களை நியமித்து, செயல்களை செய்து செய்விப்பவனே அவன். இதை சில உதாரணங்களுடன் தாசர் நிரூபிக்கிறார்.

ஜட காஷதொளகித்து நடெசுவவனு நீனு
கடல தெரெய ரபஸகைசுவனு நீனெ
கிடகெ ஹாருவ ககதல்லி கூடுவ நீன
அடவிய ம்ருககளல்லி த்வனிகைசுவ நீனே
குடி கிரியொளு பேளி ப்ரதிஷப்தனு நீனே
கடெகெ சர்வஷப்த வாச்யனு நீனே

படிது பாலகெ ஹாலு குடிசிதந்தெ என்ன
தடெயதெ கரெதந்தெ தவரமனெயந்ததி
கடுதெய்வ விஜயவிட்டல நின்ன நம்பலு
படவ பஹுபாக்யவந்தனஹுதய்யா || -- ஸ்ரீவிஜயதாசர்

அனைத்து சாஸ்திரங்களிலும் விளக்கப்பட்டுள்ள ஸ்ரீஹரியின் கர்த்ருத்வ (படைப்புத் திறன்) செயலை, சாரமாக விளக்கி, பாலாடை போல நமக்கு எடுத்துத் தருகிறார். அதற்கே சாஸ்திரங்களை பகவந்தனை 'கர்த்தும் அகர்த்தும் அன்யதாகர்துமபி சமர்த:' என்று ஸ்ரீஹரியின் ஸ்வாதந்த்ர்யத்தை வர்ணிக்கின்றன.

இன்னொரு இடத்தில், பகவந்தனின் கர்த்ருத்வ சக்தியைப் பற்றி சொல்லும்போது:

ஹரிய ஆக்ஞேயிந்த அக்னி ஜ்வலிசுதிஹனு
ஹரிய ஆக்ஞேயிந்த தரணி தா திருகுவனு
ஹரிய ஆக்ஞேயிந்த மருத தா பீஸுவனு
ஹரிய ஆக்ஞேயிந்த ஹரிவவு சலிசகளு || -- ஸ்ரீவிஜயதாசர்

'பிஷாஸ்மாத் பாத: பவதே பீஷோதேதி ஸூர்ய:' என்று வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தன்னை நம்பியவர்களை என்றும் கைவிடாத கருணாமயி ஸ்ரீஹரி. இதையெ தாசர் 'நின்ன நம்பலு .. பாக்யவந்தனஹுதய்யா' என்றார். ஸ்ரீமதாசார்யரின் சாகித்யத்தில் வந்த மிகக் கடினமான ஆத்யாத்ம விஷயங்களை தாசர்கள் சாதாரண மக்களுக்கு தெரிவித்து, அவர்களின் சிந்தனைக்கு கொடுத்து, அவர்களும் சத்கதி அடையட்டும் என்ற நல்ல நோக்கத்தில் அனைத்தையும் பேச்சு மொழியில் கொடுத்தனர்.

ஸ்ரீஹரியின் கர்த்ருத்வ சக்தி, பிரம்மாதி தேவதைகளும் ஊகிக்க முடியாதவை. லட்சுமிதேவியும் ஒவ்வொரு கணமும் 'பலு நூதனவ காணுவ அமித ஹருஷதிந்த ஹிக்குவளு' என்கிறார்.

அகோ ஹாகிஹனே இகோ ஹீகிஹனே
பரபிரம்ம ஹீகிஹனெந்தரெ
காலில்லதெ நடெசுவ கையில்லதெ ஹிடிசுவ
ஹல்லில்லதெ திலிசுவ ஹொட்டெ இல்லதெ உணிசுவ
கண்ணில்லதெ காணிசுவ கிவியில்லதெ கேளிசுவ

ஔ ஹொரகெ நுடிசுவ காணிசிகொள்ளுவ ||

ஒரு இடத்தில் ஸ்ரீஹரியை அழைத்தது இவ்வாறு:

அணுவாகபல்ல மஹத்தாகபல்ல அணுமத்தெரடொந்தாக பல்ல |
ரூபவாகபல்ல அரூபவாகபல்ல ரூபரூப எரடாகபல்ல ||

ஸ்ரீஹரி தன் இஷ்டத்திற்கு வந்ததைப் போல, ஞான வலிமை மற்றும் ரூபத்தை ஸ்வீகரிப்பான். இதையே கோபாலதாசர்:

முக்யகாரண விஷ்ணு ஸ்வதந்த்ரனே சத்ய
சக்யரு போஷ சிரி அஜபவ அமரேஷ
வியாஸ கபில ஹயாஸ்யதன்வந்த்ரி வ்ருஷப மஹி
தாஸ தத்தாத்ரேயாத்யமித ரூப
ஈசு ரூபதி ஞானவதிகாரிகள கொரெது
போஷகனு ஆதே க்ருபாளுவே ஸ்ரீஷ || -- ஸ்ரீகோபாலதாசர்

அஞ்ஞானாம் ஞானதோ விஷ்ணு: ஞானினாம் மோக்ஷதச்சஸ: |
ஆனந்ததஸ்ச முக்தானாம் ஸ ஏவைகோ ஜனார்த்தன: || -- புராண வசனம்

அஞ்ஞானிகளுக்கு ஞானம், ஞானிகளுக்கு மோட்சம், முக்தர்களுக்கு ஆனந்தம் என்று அனைத்தையும் கொடுப்பவன் ஸ்ரீஹரி. ஊகிக்க முடியாத சக்தியுடையவன் ஸ்ரீஹரி.

சர்வதந்திர ஸ்வதந்த்ரனாகி, எதையும் எதிர்பாராத நண்பனாகி, படைத்தல் முதலான செயல்களை செய்து, ஜீவர்களின் தகுதிக்கேற்ப சத்கதியைக் கொடுக்கிறான். இதுவே அவனின் சர்வகர்த்ருத்வ சக்தியாகும்.

**சிராவண சுத்த நவமி**

**த்ரிமூர்த்திகளில் உத்தமன் ஸ்ரீஹரி**

உலகத்தில் த்ரிமூர்த்திகள் என்று பெயர் பெற்ற பிரம்ம விஷ்ணு மகேஸ்வரன் மூவரும் சமம் என்பது பலரின் அபிப்பிராயம். ஆனால் ஆகமங்களில் காணும் தத்வம் வேறு. ஸ்ரீமதாசார்யர் பல

ஆதாரங்களினால் நிரூபித்தார். ஹரிதாசர்களும் பல இடங்களில், அனைவரும் அறியுமாறு உதாரணங்களுடன் நிரூபித்தனர். த்ரிமூர்த்திகளில் யார் எந்த நிலையில் இருக்கின்றனர் என்பதை ஸ்ரீமதாசார்யர் ஆகம வாக்கியத்தின் மூலம் காட்டினார்.

ருத்ரம் சமாஸ்ரிதா தேவா: ருத்ரோ பிரம்மாண மாஸ்ரித: |
பிரம்மா மமாஸ்ரிதோ நித்யம் நாஹம் கிஞ்சிதுபாஸ்ரித: ||

பிரம்மதேவரில் இருந்து அந்த பெயரில், ஸ்ரீஹரி உலகத்தையும் அதிலுள்ள பொருட்களையும் படைக்கிறார். ருத்ரதேவரில் இருந்து அழித்தல் தொழிலை செய்கிறார். தேவதைகள் சிவனையும், சிவன் பிரம்மனையும், பிரம்மன் ஸ்ரீஹரியையும் வணங்குகின்றனர். ஸ்ரீஹரியை காப்பவர் யாருமில்லை. காரணம் அவர் சர்வதந்த்ர-ஸ்வதந்த்ர.

காலு தொளிதவனொப்ப தொளஸி கொண்டனொப்ப
மௌளி மேலாஜலவ ஸதத தரிஸிதனொப்ப
பாலிசுவ ப்ரபுவொப்ப கோலுவ தளவாரனொப்ப
மூர்லோகவரியெ புட்டிஸித பிதனொப்ப
ஆலோசனெய பல்லவகெ ஸம்ஷயஸல்ல
மாலெயனு மஹலக்ஷ்மிய ஹயவதனகித்தளாகி || ஸ்ரீவாதிராஜர்

இன்னொரு இடத்தில் ஸ்ரீஹரியே,

ஒந்து மூருதியிந்த ஸ்ருஷ்டியு மாடி ம
த்தொந்து மூருதியிந்த பாலனெ மாடி
ஒந்து மூருதியிந்த சம்ஹரனெ மாடி
ஒந்தொந்து மஹிமெயு அனந்தாத்புத ||

இன்னொரு இடத்தில், ஸ்ருட்யாதி அஷ்ட கர்த்ருத்வனும் அவனே என்று நிரூபித்து, ஸ்ரீஹரி அனைவரை விடவும் சர்வோத்தமன் என்று நிறுவுகிறார்.

தேவரெல்லரு என்ன தாஸரு, ஸ்ரீவதுவெ என்னரஸி ஜகதீ
ஜீவராஷிய நானெ புட்டிஸி மகுளெ ரக்ஷிபனு |
லாவகர கொலிஸுவனு நரகவனீவ ஸ்வர்கவனித்து சுஜனர
காவனிது வேதாந்த சித்தாந்தத ரஹஸ்ய கணா || -- ஸ்ரீவாதிராஜர்

**சிராவண சுத்த தசமி**

**பெயர் மட்டும் போதுமே**

முதலிலிருந்தே ஹரிதாசர்கள், ஸ்ரீஹரியின் பெயரின் மகிமைகளை புகழ்ந்தே வந்துள்ளனர். ஹரி நாமத்தைவிட பெரியது வேறொன்றும் இல்லை. அதற்கே புரந்தரதாசர் ‘ஹரி ஸ்மரணே மாடோ நிரந்தர’ என்றார். சம்சார சாகரத்தைக் கடப்பதற்கு ஒரு உபாயம் ஹரி நாமஸ்மரணையே என்று கனகதாசர், உதாரணத்துடன் விளக்குகிறார்.

சம்சாரவெம்ப சாகரவன்னுத் தரிசுவொடெ
கம்சாரி நாமவொந்தே சாகுமனவே ||ப||

யதியாகபேட நீ வைராக்யவனெ பிடிது
விரதமாடிதேனெம்ப ஹய்ம பேட |
ஸ்ருதி ஸ்ம்ருதிய நோடிதனெம்ப சேஷ்டெய பேட
ரதிபதி நாமவொந்தெ சாகு மனவெ ||1||

தனுதண்டிஸி துதிய கொடுகல்லின மேலே
வனிதெயனு பிட்டு தபவிரலு பேட |
அனுதினவு நீரொளகெ முளுகி நடுகலு பேட
வனஜனாபன நாம நெனெகண்ட்ய மனவே ||2||

தீர்த்தயாத்ரெய மாடி பஹுவிததி பளலி க்ரு
தார்த்தனாதெனெம்ப ஹெம்மெ பேட |
பார்த்தசாரதி காகினெலெ ஆதிகேசவன சங்
கீர்த்தனெய மாடி சுகியாகோ மனுஜ ||3|| -- ஸ்ரீகனகதாசர்

அனைத்து தாசர்களும், ஆசார, அனுஷ்டாங்களை கடமைக்காகச் செய்யாமல், அதன் உள்-அர்த்தங்களை அறிந்து, படாடோபம் இல்லாமல் செய்யவேண்டும் என்று வலியுறுத்துகின்றனர். அனைத்திற்கும் ஹரி நாமம் ஒன்று இருந்தாலே போதும் என்கின்றனர். ஜகன்னாததாசரும்,

சுலபனோ ஹரி, தன்னவரனரெ

களிகெ பிட்டகலனோ ரமாதவ
நொலிசலரியதே பாமரரு பளலுவரு பவதொளகே || என்றார்

புரந்தரதாசரும்,

நின்ன நாமக்கெ சரி காணேனு ஜகதொளு
கன்னமஹிம ஸ்ரீபுரந்தரவிட்டலா || என்றார்.

**சிராவண சுத்த ஏகாதசி
சாதனை என்றால் என்ன?**

சாதனை செய்வதற்கான சரீரத்தைப் பெற்றுவந்த என்னிடம் 'சாதவன்ன யன்னிந்தாதத்து காணே' என்று கோபாலதாசர் ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொண்டது நமக்கும் வரவேண்டும். சாதகர்களுக்குத் தேவை நல்ல நடத்தை. மனதில் இருக்கவேண்டிய நல்ல சிந்தனைகள். இவற்றை எப்போதும் பின்பற்ற வேண்டும். இதையே கோபாலதாசர், எதுவும் தெரியாமல், செய்யாமல் இருக்கும் என்னை தாசனாக ஏற்றுக்கொண்டு அருள்வாயாக என்று வேண்டுகிறார்.

எந்திகு கிருஷ்ண நின்ன நா பொந்துவ பகெ |
வந்து சாதனவன்ன யன்னிந்தாதத்து காணே ||ப||

சத்கர்ம அனுஷ்டான சமீசீன வசனகளு
தத்காலக்கீவ தருவாயாவில்ல |
ஹ்ருத்கமலதி நின்ன ஹிததி திளிது நோடி
யத்கிஞ்சிதவு அன்ய யாசிஸிதவனல்ல ||1||

மாடுவ கர்மகள மாடிசூரரியதே
பேடுவ பல பேட பாரத்தெல்ல |
காடுவரா அஞ்சிஸூ கார்யவா திளியதெ
னாட விஷயங்களி கோட்யாடிதேனோ தேவ ||2||

ஸ்ரவண மொதலாத நவவித பகுதியொளு
விவரிஸிதரென்னல்லெ வந்தொகாணே
பவன மதவனு பொந்தவனல்லதெ

பவனவரிது பதகரகொதரியதாவே ||3||

அன்யந்த அன்யந்த ஜனுமகளு போதவு
யேனு நித்யானித்ய ஞானவில்ல |
நன்னது நா கர்மனெம்புது பிடதின்னு
குன்னி மனவு யன்னா தன்மத்தலெளுபோது ||4||

யேசு பரி உபாய யோசிஸிதரோ இவகெ
மாஸதெ போகுவ கொந்து காணே |
ஈஷ நீ யனகின்னு தாஸ நின்னவனெனிஸி
போஷிஸிகோ யன்ன கோபாலவிட்டலா ||5|| --ஸ்ரீகோபாலதாசர்

தாசர் வேண்டிக்கொண்ட ஒவ்வொன்றும் மிகவும் சரியாக உள்ளது. இந்த ஏக்கம், ஆசை இருந்தால், சாதனை வழி சரியாக இருக்கிறதென்று பொருள்.

**சிராவண சுத்த த்வாதசி**

**நீசன் என்பவன் யார்?**

ஸ்ரீஜகன்னாததாசர் இந்தப் பாடலில் கொடுத்துள்ள பட்டியலில் இல்லாத ஒன்றே இல்லை. அர்த்தமுள்ள வாழ்க்கைக்கு இங்கு சொல்லப்பட்டுள்ள விஷயங்களை நன்கு அறிந்து, பின்பற்றினால், வாழ்க்கை பயன்பெறும் என்பதில் சந்தேமில்லை.

ராகம்: பந்துவராளி. தாளம்: ரூபக

நீசனல்லவே இவனு நீசனல்லவே ||ப||
கீசகாதிப்ரியன குணவ மோசிசதலெ இஷ்ட நரனு ||அப||

களத்ர நங்க்ரி கமல ஏகசித்ததல்லி மனோ
வ்யாகுலகள பிட்டு சுகோத்ரேகதிந்த ஸ்மரிசதவனு ||1||
லோகவார்த்தெகளல்லி எடமூகனெனிஸி விஷயகளவ
லோகிசுத்த ஸ்ரீஷகிவு ப்ரதீகவெந்து திளியதவனு ||2||

ஹரிகதாம்ருதவனு பிட்டு நரசரிதெயன்னு பொகளி த
ர்துரகளந்தெ ஹரட திவஸ பரிதெ களெவுதிப்ப மனுஜ ||3||

ஜனனிஜனகரந்தெ ஜனார்த்தனனு சலஹுதிரலு பிட்டு
தனிகர மனெகளல்லி ஷுனகனந்தெ திருகுவவனு ||4||

விஹித கர்ம தொரெது பரர க்ருஹகளல்லி சஞ்சரிசுத
குஹகயுக்தியிந்த லோகமஹிதரன்னு நிந்திசுவவனு ||5||
பஹள த்ரவ்யதிந்த கருடவாஹனங்க்ரி பஜிஸி அனு
க்ரஹத மாடு எந்து பரிதெ அஹிகசுகத பயஸுவவனு ||6||

கருனஜன்ய புண்யபாபவெரடி ஹரியாதீனவெந்து
ஸ்மரிஸுதிரலதி பகுதியிந்த ஹருஷபடதல்லிப்ப மனுஜ ||7||
ஜீவகர்த்ருத்வ மரெது தேவனொப்ப கர்த்ருரமா
தேவி மொதலகொண்டு ஹரிய சேவகரெந்தரியதவனு ||8||

வாதஜனகனெனிப ஜகன்னாதவிட்டலன பாதாப்ஜ
போதவா ஆஷ்ரெயிஸி பவ கு வைதரணீய தாடதவனு ||9||

இங்கு தாசர், நீசனின் நீச குணங்களை பட்டியலிட்டு, சஜ்ஜனர்கள் இதிலிருந்து தூரம் இருந்து, சாஸ்திரங்களில் சொன்னதைப் போல நடந்து புனிதராகுங்கள் என்று அறிவுறுத்துகிறார்.

**சிராவண சுத்த த்ரயோதசி**
**உலகத்தை காப்பவன் நீயே**

கரதிந்த நின்ன சுமூர்த்தி பூஜெயனு மாடலில்ல, இஹ
பர எரடனு பிட்டு விஷயதொளனுதின பாள்வெனல்ல |
குருஹிரியர மாது கேளதெ நா பலு கெட்டனல்ல, ஹரி
பரம புருஷ நீனல்லதெ ஜகதொளு காவரில்ல || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பிறந்து வந்த ஜீவன், சம்சாரத்தில் விழுந்து ஓடியாடி நொந்து போகிறான். ஏதோ ஒரு நாள் பின்னோக்கி நினைத்துப் பார்த்தால், கடந்து போன சம்பவங்கள் நினைவுக்கு வருகின்றன. செய்த செயல்கள், அதன் பின்விளைவுகள் என அனைத்தும் வந்து கஷ்டப்படுத்துகின்றன. அதாவது இந்த/மறு உலகத்தைப் பற்றிய சிந்தனை இல்லாது, தற்காலிக சுகங்களில் ஈடுபட்டிருந்த கணங்கள்

தெரிகின்றன. அப்போது தோன்றும் சிந்தனைகள், பேச்சுகளை தாசர் தம் பாடலில் வெளிப்படுத்துகிறார்.

துக்கப்படும் ஜீவி, வேறு வழி தெரியாமல், தன் கெட்ட செயல்களை நினைத்து வருந்தி, அனைத்தையும் இறைவன் முன் மனம்விட்டு கூறுகிறான்.

கடபிடதெ அனுதினதி பாபத கடலொளகெ நா பித்தேனோ
தடவ காணதெ துக்கதொளு பெந்தொடலொளகெ நா நொந்தேனோ
|
பிடதெ நின்னய த்யானவெந்தெம்ப ஹடகவேரிஸு எந்தேனோ
த்ருடதி நின்னய பாத சேரிஸோ ஒடெய புரந்தரவிட்டலா || --
ஸ்ரீபுரந்தரதாசர்

'அன்யகதி நீனல்லதெ ஜகதொளு அன்யர நா காணே' என்று, ஸ்ரீஹரியே கதி என்று, அவனின் தன் நிலையை, ஒளிவுமறைவில்லாமல், வெட்கத்தை விட்டு சொல்கிறார். அப்போதே பகவந்தன் கண் திறந்து பார்க்கிறான். அர்ஜுனன் 'சிஷ்யச்யேஹம் ஷாதிமாம் த்வாம் ப்ரபன்னம்' என்று சொன்னதுபோல, ஸ்ரீஹரியிடம் சரணடையவேண்டும். தான் செய்த தவறுகளின் பட்டியலை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்து, மன்னிப்பு கோரவேண்டும். இது ஸ்ரீஹரிக்கு கேட்கவேண்டும். இதிகாசத்தில் பகவத் பக்தர்கள் பின்பற்றிய வழி இதுவே. 'அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' என்று அவனையே சரணடையவேண்டும். தாசரின் வாக்கினையே பின்பற்றி தன்யராவோம்.

**சிராவண சுத்த சதுர்தசி**
**இத்தகையவரின் நட்பு வேண்டாம்**

மனிதனின் வாழ்க்கை நலம்பெற, இத்தகையவர்களின் நட்பு தேவை, இத்தகையவர்களின் நட்பு கூடாது என்று ஹரிதாசர்கள் பட்டியிலிட்டுக் கொடுத்திருக்கின்றனர். 'சங்கவாகலி சாது சங்கவாகலி' என்றும் 'அஞ்ஞானி மனுஜர சங்க பேட' என்றும்

சொல்கின்றனர். ஸ்ரீபுரந்தரதாசர் கொடுத்துள்ள பெரிய பட்டியலில் இருக்கும் ஒவ்வொரு விஷயமும் சிறப்பு.

முந்தே பலா எந்து ஹிந்தாடிகொம்பர சங்க பேட |
குந்து நிந்தெகள பவாட நீடுவர ப்ரசங்க பேட ||ப||

துதினாலிகெ பெல்ல எதெ கத்தரியவர சங்க பேட
ஹதவு மீரித மேலே ஹலவனாடுவர சங்க பேட ||1||
ஸ்வேயாவகுண பிட்டு பரரவகுண தோர்ப சங்க பேட
தயெ தர்ம தாக்ஷிண்ய அரியத மனுஜர சங்க பேட ||2||
வினய விவேகவில்லத வித்வாம்ஸர சங்க பேட
தனகில்லதந்த பண்டர மித்ர ஜனர சங்க பேட ||3||
ஆடி அளகுவ அஞ்ஞானி மனுஜன சங்க பேட
கூடெ குமதிகள குபித மனுஜர சங்க பேட ||4||
தன்ன கார்யக்காகி பரர கெடிசுவர சங்க பேட
சென்ன புரந்தரவிட்டலன்ன ஹொரது ப்ரசங்க பேட ||5||

தாசரின் இந்தப் பாடலில் வரும் வாக்கியங்களை புரிந்து கொள்வது சுலபமென்றாலும்; அவற்றை வாழ்க்கையில் பின்பற்றுவது அவ்வளவு சுலபமல்ல. காரணம் மேற் சொன்னவர்கள், நம் குடும்பத்தில், நட்பிலும், சமூகத்திலும் கண்டிப்பாக இருப்பர். தாசரின் இன்னொரு வாக்கும் நினைவில் வேண்டும். 'தர்மவே ஜெயவெம்ப திவ்ய மந்திர. மர்மவன்னரிது மாடலிபேகு தந்த்ர'. சமூகத்தில் வாழும் நாம், அனைத்தையும் துறப்பதென்பது முடியாத விஷயம். தாசர் இங்கு சொல்லியவற்றை ஒவ்வொன்றையும் ஆராய்ந்து, அத்தகையவரின் நட்பை விலக்கவேண்டும். அவற்றின் உள்-அர்த்தங்களை புரிந்து நடக்கையில், முந்தைய சாதனைக்கு அது பயன்படும் என்பதில் சந்தேகமில்லை. கூடவே இத்தகைய துர்குணங்கள் நம்மில் இல்லாமல் பார்த்துக் கொள்வதும் முக்கியம்.

**சிராவண பௌர்ணமி**
**அனைத்து இடங்களிலும் பகவந்தன்**

ஸ்ரீஹரி அனைத்து காலங்களிலும், அந்தந்த காலமாகவே இருக்கிறான். அணுவை விட சிறியதாகவும்,

மிகப்பெரியனவற்றைவிட பெரியவனாகவும், அனைத்து இடங்களிலும், அவற்றை கட்டுப்படுத்துபவனாக நிலைத்திருக்கிறான். இது ஒரு அற்புதம். பூமியில், ஆகாயத்தில், பிரம்மாண்டத்தின் அனைத்து இடங்களிலும் நிரம்பியிருப்பவனாக இருக்கிறான் ஸ்ரீஹரி. இதையே ஸ்ரீபுரந்தரதாசர்:

அணுரேணு த்ருணகாஷ்ட பரிபூர்ண கோவிந்தா
நிர்மலாத்மகனாகி இருவுதே ஆனந்தா || என்றார்

அனைத்து இடங்களிலும், ஸ்வதந்த்ரனாகி இருந்து, தன் பக்தர்களிடமிருந்து அனைத்து செயல்களையும் செய்வித்து மகிழ்வதே அவனது வாடிக்கையாக இருக்கிறது.

சர்வாதிஷ்டானதலி ஹரியே வியாபிஸி இத்து
சர்வாதிகளிந்த வியாபார கைஸி
நிர்வாஹகனாஹ ஸ்வதந்த்ர தானாகி || -- ஸ்ரீமோதலகல்லு சேஷதாசர்

'அந்தர்பஹிஸ்சதத் சர்வம் வியாப்த நாராயணஸ்தித:' அனைத்திடங்களிலும் வியாப்தனான ஸ்ரீஹரி என்பதை 'மஹபுருஷ ஜாண்டாந்தரதி பஹிரதி வியாப்த நிர்லிப்த' - பிரம்மாண்டத்தில் உள்ளே வெளியே வியாபித்து, தனக்கும் எதற்கும் சம்பந்தம் இல்லாததைப்போல இருக்கிறான். அனைவரிடம் செயல்களை செய்விக்கிறான் ஸ்ரீஹரி என்பதை:

வனஜ ஜாண்டதொளகிள ஜீவர
தனுவினொளஹொரகித்து காணிஸ
தனிமிசேஷன சகல கர்மவ மாள்பனவரந்தே || (ஹரிகதாம்ருதசாரம்: 3-12)

அனைத்து இடத்திலும் இருக்கிறான் என்பதை தாசர் 'எல்லரொளு தானிப்ப தன்னொளகெல்லரனு தரிஸிஹனு' என்கிறார்.

ஸ்ரீஹரியின் வியாப்தித்வ குணத்தை நேரடியாகக் கண்டதற்கு உதாரணம் என்றால் - நரசிம்ம அவதாரம், அர்ஜுனனுக்குக் காட்டிய விஸ்வரூபம் ஆகியன. இவை அனைத்தையும் தொகுத்து ஸ்ரீஜகன்னாததாசர் தெரிவித்த வாக்கியங்கள் இவை:

எல்லி கேளிதரல்லி நோடித
ரல்லி பேடிதரல்லி நீடித
ரல்லி ஓடிதரல்லி ஆடிதரல்லி இருதிஹனு ।
பல்லிதரிகதிபல்லிதனு சரி
யில்ல இவகாவல்லி நோடலு
குல்ல மானவரொல்லன ப்ரதிமல்ல ஜகக்கெல்ல ॥
(ஹரிகதாம்ருதசாரம்: 3-21)

இதையே கோபாலதாசர் வர்ணிக்கும் விதம் அற்புதமாக இருக்கிறது.

எல்லி நோடலு நீனு இல்லத ஸ்தளவில்ல
எல்லரந்தர்யாமி எல்லியூ நீனே ।
ஹுல்லு காஷ்ட ஜட சேதனகளல்லி நீ
நில்லதில்லவெந்து எல்ல ஸ்துதிஸுதிவே ॥

ஸ்ரீஹரி சர்வவியாபி என்று அனைத்து வேத புராணங்களிலும் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. இது ஸ்ரீஹரியின் விசேஷகுணம். அதை வேதத்தில் 'அந்தர்பஹிஸ்சதத் சர்வம் வியாப்த நாராயணஸ்தித:' என்றனர்.

ஸ்ரீஜகன்னாததாசர் தம் ஹரிகதாம்ருதசாரத்தில் ஒரு சந்தி முழுக்கவே ஸ்ரீஹரியின் வியாப்திக்காக ஒதுக்கியிருக்கிறார். இதன் சாரமாக: 'மஹபுருஷ ஜாண்டந்தரதி பஹிரதி வியாப்த நிர்லிப்த' என்றும் இன்னொரு இடத்தில் மிக அழகாக:

அணு மஹத்தினொளிப்ப கன பர
மணுவினொளு அடகிஸுவ சூக்ஷ்மவ
முணுகிஸுவ தேலிஸுவ ஸ்தூலகளவன மாயவிது ॥ -- (3-19)

ஸ்ரீஹரி இல்லாத இடம் இல்லை. அதற்கு வேதங்கள் அவனை 'அணோரனீயான் மஹதோ மஹீயான்' என்கிறது.

அனாதி காலத்திலிருந்து அனந்த காலம்வரை, தேச, கால என அனைத்திலும் வியாப்தனாக இருக்கிறான். பிரம்மாண்டத்தின் அணுக்களில் நிரம்பியிருக்கிறான். அந்தந்த பொருட்களில் அதன் தன்மையாக அதனை கட்டுப்படுத்துபவனாக இருக்கிறான்.

சிறுவன் பிரகலாதனின் பக்திக்கு, அவனிடமிருந்த திடமான நம்பிக்கைக்கு காட்சியளித்தான். நரசிம்மனாக தான் அவதரித்து, தான் சர்வவியாப்த சர்வாந்தர்யாமி, சர்வநியாமக என்று நிரூபித்தான். இதை ஸ்ரீஸ்ரீபாதராயர்:

தத்ப்ருத்யதாக் ஸத்யவம் மாட பே
காகி ஸர்வத்ர தான் தன்ன வியாபகதத்வம்
பத்யவாகிப்பவோல் அத்புதாகார பொத்தம்

கிருஷ்ணனின் விஸ்வரூபத்தைக் கண்ட அர்ஜுனன்:

பஷ்யாமித்வம் சர்வதோSனந்தரூபம் |
த்யாவா ப்ருதிவ் யோரிதமந்தரம் ஹி
வியாப்தம் த்மைகேன திஷஸ்ச சர்வா: ||

பிரம்மாண்டம் ஹரிமயம். ஹரி இல்லாத இடமில்லை. இதையே வியாசராஜர் 'கண்டனு தன்னனு சஹிததி ஹரி தேஹதி பிரம்மாண்ட' என்றார்.

சலில பூ கிரி எதெ நானா வ்ருக்ஷ
பல ம்ருக பக்ஷி கானன முக்த
ஸ்தளகலவியாக்ருத ககன த்ருண
ஜல பாதக தரு பவன – ஆள
ஔகெ ஹொரகெ எல்ல ஸ்தளதல்லி ஹரிமய || -- ஸ்ரீவிஜயதாசர்

எல்லி நோடலு நீனு அல்லில்ல வியாப்தனு
எல்லி நோடலு நீனு அல்லல்லி பூர்ணனு
பல்லிதவரிகெ பல்யா பல்லவகதிசுவப
சல்லுவுதே பிடரு எல்லி நினகெ சம
வில்லவு நாகாணே மல்லர தர்மன
ஹூல்லு கல்லினல்லி எல்லதி பரிதன
எல்ல காலவு நம்மனெல்லர சலஹுவி || -- ஸ்ரீகோபாலதாசர்

அனைத்து ஜீவரிலும் ஸ்ரீஹரி இருப்பதை ஜகன்னாததாசர் விளக்குகிறார்.

மர்த்யதொள ஹொரகெத்த நோடலு ஸூத்துதிப்பனு

அத்யதிக சந்த்ருப்த த்ரிஜகத் வியாப்த பரமாப்த ||

குணிகணகொளகித்து குணிகுண
களெனிசுவனு குணபத்தனாகதெ
குணஜ புண்யாபுண்யபல பிரம்மாதி சேதனக்கே||

சர்வேந்த்ரிய மனோ விஷ்ணு: சர்வப்ராணிஷு ச ஸ்தித: |
சர்வனாமபிதேயஸ்ச சர்வவேதோதிதஸ்ச ஸ: ||

அனைத்து இடங்களிலும் இருந்தாலும், ஸ்ரீஹரி தோஷமற்றவனாக இருக்கிறான். இதற்கு தாசர் கொடுத்த உதாரணம்:

தப்தலோஹவு நோள்பஜனரிகெ சப்தஜிஹ்வன தெரதி தோர்புது
லுப்தபாவக லோஹகாம்புதி பூர்வதோபாதி ||

**சிராவண பகுள ப்ரதமை**

**என்ன ஆனாலும் ஹரிஸ்மரணை தேவை**

கிருஷ்ணாம்ருத மஹார்ணவத்தில், ஸ்ரீமதாசார்யர், ஹரி ஸ்மரணை எப்போதும் இருக்கவேண்டும் என்கிறார்.

ஆஸீனஸ்ய ஷயானஸ்ய திஷ்டதோ ப்ரஜதோSபி வா |
ரமுஸ்வ புண்டரீகாக்ஷ ஹ்ருதயே மம சர்வதா ||

இந்த வாக்கினையே, ஹரிதாசர்கள் முன்னெடுத்து, யாராக இருந்தாலும், எங்கு இருந்தாலும், எந்த நிலையிலும், ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை இருக்கவேண்டும் என்றனர்.

சங்கேதவாகலி பரிஹாஸவாகலி
அணதிந்தாகலி டம்பதிந்தாகலி
எத்யாகலி மத்தெ பித்தாகலி |
நமோ நமோ நமோ சிரிகிருஷ்ண எந்து கோஷ
முகுதி கன்னிகெய மதுவெய வாத்ய கோஷ || -- ஸ்ரீவியாசராஜர்

அணகதிங்கதாகலி டம்பதிந்தாகலி
எத்தடாகலி பித்தடாகலி

தாகிதடாகலி தாகில்லதாகலி
மரெது மத்தொம்மெ யாகலி
ஹரி ஹரியெந்தவனிகெ நரகத பயவேகெ
யம பட்டண கட்டிதரேனு பட்ட பயலாதரேனு
ஹரிதாசரிகெ புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பாகவதகாரரின் வாக்கு:
சாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா ஸ்தோபம் ஹேலனமேவ வா |
வைகுண்ட நாம க்ரஹணம் அலேஷாகஹரம் விது: ||

ஸ்ரீஜகன்னாததாசர்:
மலகுவாகலி ஏளுவாகலி
குளிது மாதாடுதலி மனெயொளு
கெலசகள மாடுதலி மைதொளெவாக மெலுவாக |
கலுஷதூரன சகலடாவிலி
திளியெ தத்தன்னாம ரூபதி
பஹியலிப்பனு ஒந்தரேக்ஷண பிட்டகலனவர || (13-3)

மக்களாடிசுவாக... நர
சிக்கனெமதூதரிகெ ஆவாவல்லி நோடிதரு || (13-1)

**சிராவண பகுள த்விதியை**
**ஸ்ரீராகவேந்த்ர ஸ்வாமிகளின் ஆராதனை**

பூஜ்யாய ராகவேந்த்ராய சத்யதர்ம ரதாயச |
பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே ||

'தேவனெந்தரெ வெங்கப்பா, குருகளெந்தரெ ராகப்பா' இது பொதுவாக அனைவரும் சொல்லும் வசனம். ராயரைப் பற்றி அப்பண்ணாசார்யர் சொல்வது இப்படியாக இருக்கிறது.

ஸ்ரீமத்வமததுக்தாப்தி சந்த்ரோSபவது சதாsனக: |
ஸ்ரீமத்வமத வர்தன: | அபேக்ஷிதப்ரதாதான்யோ ராகவேந்த்ரன்ன வித்யதே ||

ஸ்ரீமத்வ மதத்தின் சந்திரனாக, பக்தர்களின் வேண்டுதல்களை நிறைவேற்றுபவராக, மந்திராலயத்தில் வீற்றிருக்கும் ஸ்ரீராயரை யார்தான் வணங்க மாட்டார்கள்? பஜிக்க மாட்டார்கள்? 'பஜதாம் கல்பவ்ருக்ஷாய நமதாம் காமதேனவே'. ஹரிதாச சாகித்யத்தின் இரண்டாம் கட்டத்தின் துவக்க நாயகர் ஸ்ரீராகவேந்திரர். இவருக்குப் பிறகு வந்த - இவரை வணங்காத, பாடாத ஹரிதாசர்கள் இல்லை. பண்டித பாமரர்களுக்கும் ஞானாதி அபீஷ்டங்களைக் கொடுப்பவராக இருக்கிறார். குருகளின் மகிமையை ஹரிதாசர்கள் மிகவும் அருமையாக தங்கள் கிருதிகளில் பாடியிருப்பதை காண்கிறோம்.

ஸ்ரீவிஜயதாசர் --
நோடிதே குருகள நோடிதே ||ப||

நோடிதேனு குருராகவேந்திரர
மாடிதேனு பகுதியலி வந்தனெ
பேடிதேனு கொண்டாடி வரகள
ஈடு இல்லதெ மெரெவ மஹிமெய ||அப||

'டிப்பணாசார்ய சக்ரவர்த்தி' என்றே அழைக்கபடுபவரான ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகளின் கிரந்தங்களின் மகிமை மிகவும் அபாரமானது. ஐம்பதுக்கும் மேற்பட்ட கிரந்தங்கள் டீகா, டிப்பணி, ஸ்வதந்த்ர கிரந்தங்கள், ஸ்தோத்திரங்கள் என பலவிதங்களாக இருக்கின்றன. பரிமளாசார்ய, பாவதீபகாரர் ஆகிய பட்டங்களைக் கொண்டவர். கன்னட மொழியிலும் கிருதிகளை இயற்றி ஹரிதாச சாகித்யத்திற்கும் ஒளியூட்டிய மகான் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள். இவரைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாசர்:

ஹொந்தி பதுகிரோ ராகவேந்திர ராயர |
குந்ததெம்மனு கருணதிந்த பொரெவர || என்று கொண்டாடினார்.

ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்:
யதிவர நிம்மனு ஸ்துதிப ஜனரு திவ்ய
கதியனு பொந்துவரு ராகவேந்திரா ||

ஸ்ரீகோபாலதாசர்:
ராயென்னெ ராசி தோஷகள தஹிஸுவரு

காயென்னே கன ஞான பகுதியனித்து
வே என்னெ வேகாதி ஜனன மரண கெம்மெ
த்ரா என்னெ த்ரவிணோத ஸ்ருதிகீவ கனகாம்ப ||

ஸ்ரீபிராணேசதாசர்:
ஸ்ரீராமசந்திராங்க்ரி நரசிம்ம ப்ருங்கனிகெ
தீஷ சுதீந்த்ரகர சம்பூதனிகெ
வாராஹிதீர மந்த்ராலய நிகேதனகெ
ஸ்ரீராகவேந்த்ர ராயர சரணக்கெ
ஜயமங்களம் நித்ய சுபமங்களம் ||

இன்றும் ராகவேந்திர ஆராதனை விழாக்களில் பங்கேற்பது, ராகவேந்திர விஜயம் பாராயணம் செய்வது முக்கியமாக இருக்கிறது. ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரம், அஷ்டோத்திரம், ராகவேந்திர விஜயம், குருகுணஸ்தவம், ஹரிதாசர்களின் பாடல்கள் ஆகியன பாராயணம் செய்கிறார்கள். அறிஞர்களால் ராயரின் வாழ்க்கைச் சரிதம், மகிமைகளை சொல்லக் கேட்கிறார்கள். கலியுகத்தின் கல்பவிருட்சம் என்று புகழ்பெற்றுள்ள ஸ்ரீராயரின் அருள் அனைவருக்கும் தேவையாக இருக்கிறது. உயிருடன் பிருந்தாவன பிரவேசம் செய்தவரின் மூலபிருந்தாவன தரிசனம் அதிஅற்புதம்.

விஸ்வேந்திர தீர்த்தர்:
மத்வமதவெம்ப துகதஸாகரதொளு |
உத்பவிஸித மூர்ண ஹிம கர தேஜ ||

ஸ்ரீவித்யாபிரசன்ன தீர்த்தர்:
யதிவர நிம்மனு சுத்திப ஜனரு திவ்ய
கதியனு பொந்துவரு ராகவேந்திர ||

மூகோபியத் பிரசாதேன முகுந்த சயனாயகெ |
ராஜராஜாயதே ரிக்தோ ராகவேந்திரம் தமாஸ்ரயே ||

**சிராவண பகுள த்ருதியை**

**கடனை தீர்ப்பாயாக**

நம் நிலைகளை நன்கு ஆராய்ந்து, நல்ல நிலையை அடைவதற்கு ஸ்ரீவியாசராஜர் அறிவுறுத்துகிறார். ஸ்ரீஹரி எல்லா இடங்களிலும் இருந்தாலும் நாம் பார்ப்பதில்லை. 'பஹு சித்ர ஜகத் பஹுதாகரணாத் பரசக்திரனந்த குண: பரம:' என்று ஸ்ரீமதாசார்யர் சொன்னாலும் புரிவதில்லை. ஸ்ரீஹரியே நற்புத்தியைக் கொடுத்து நம்மைக் காக்கவேண்டும் என்கிறார்.

நிதிய மேலித்து நிதியனரியதந்தெ
தன்ன கண்டமணிய தா மரெதந்தெ
கண்ணரெயத ஹஸுளெ தாஹனரியதந்தெ
என்னலியெந்திப்ப நின்ன நரியதெனகெ
நின்ன போதிதரு நின்ன தாசரு சிரிகிருஷ்ண || -- ஸ்ரீவியாசராஜர்

ஒரு உகாபோகத்தில் ஸ்ரீவாதிராஜர் ஜீவிகளின் இயலாமையை நினைத்து, எல்லாம் வல்ல ஸ்ரீஹரியே நம்மைக் காக்கவேண்டும் என்று வேண்டுகிறார்.

ஆடிகாதரவில்ல ஹிடிவுதகெ கொம்பில்ல
கடெ ஹாயிசுவவரில்ல கஷ்டபட்டெனல்ல
கண்ணீரு தப்பலில்ல காமசுக படலில்ல
உண ஹோகி பாய மரெதந்தாயிதல்லா
படதனவு பிடலில்ல பங்க பட்டினல்லா
கருட சர்பன ஸ்னேஹதந்தாயிதல்லா
என்ன மனதுப்பஸவ ஸ்வாமி ஸ்ரீஹரியே பல்லா
இன்னாரிகுஸூரலோ ஸ்ரீஹயவதனனராய || -- ஸ்ரீவாதிராஜர்

பல விதமான கடன்களினால் கட்டுப்பட்டிருக்கும் மனிதனை நினைத்து, இவற்றிலிருந்து நம்மை விடுவிக்குமாறு ஸ்ரீஹரியிடம் வேண்டுகிறார்.

ருணவெம்ப பாதகவு பஹுபாதெ படிசுதிதெ
ருண நிதியே நீனின்ன ருணவ பரிஹரிஸோ ||

ருண சோதகவு ஜன்மஜன்மாதிகதி
எத்தபோதரு பிடதெ பென்னிட்டபஹுது
பந்து ஜனகள முந்தெ பஹுமானவு ஹோகி
அந்தவளிதெனு நானு நொந்து ருணதி
இந்திரேஷ அரஸ ஸ்ரீபுரந்தரவிட்டலனெ
இந்தென்ன ருணவ பரிஹரிசய்யா மொரெயெ ‖ -- ஸ்ரீபுரந்தரதாசர்

**சிராவண பகுள சதுர்த்தி**
**பக்திக்கு மட்டும் மயங்கும் ஸ்ரீஹரி**

பக்தியைப் பற்றி ஸ்ரீகிருஷ்ணன் சொல்வதாவது:

நாஹம் வேதை: ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।
சக்ய ஏவம் விதோ த்ரஷ்டும் த்ருஸ்தவான் அஸி மாம் யதா ‖
பக்த்யா த்வனன்யயா சக்யா அஹம் ஏவம் விதோ அர்ஜுனா ।
(பகவத் கீதா 11-53,54)

வேதஞானம், தவம், தான, யாகம் ஆகிய எவற்றாலும் ஸ்ரீஹரியை அடைவது சாத்தியம் இல்லை. வெறும் இடைவிடாத பக்தியினால் மட்டுமே அவனைக் காண்பது சாத்தியம். ஸ்ரீகிருஷ்ணனின் இந்த செய்தியை, ஸ்ரீவிஜயதாசர் தனது வார்த்தைகளில் இவ்வாறு சொல்கிறார்.

தான தர்மகெ சிலுக ஞான மௌனகெ சிலுக
கான யானகெ சிலுக ஞான லோககெ சிலுக
த்யானக்கே குணிதக்கெ சிலுக காணிகெ கொட்டரெ சிலுக
எணிஸி ஜபிஸலு சிலுக க்ஷோணி சரிசலு சிலுக
நானா வ்ரத மாடலு சிலுக ஏனேனு கர்மக்கெ சிலுக ‖
மாணதெ த்ருடபக்தி மாதுரவித்தரெ
தானாகி கரெயதெ பளியல்லி பந்தீக
காணிஸிகொம்பனு பக்தனிகெ அனுதின
ஏனெம்பேனோ சிரியரசன்ன லீலெகெ
ஆ நிர்ஜரரந்து குணிஸி எணிசுவரு
நானெ எந்தவனிகெ எந்திகு ஒலியனு
மீன கீதனனய்யா விஜயவிட்டலரேய

மானப பகுதிகெ லேஷ ஆலசவில்லா ||

சர்வதந்த்ர-ஸ்வதந்த்ரரான ஸ்ரீஹரிக்கு லட்சுமி, பிரம்மா முதலிய அனைவரும் கட்டுப்பட்டவர்களே. எதையும் எதிர்பார்க்காமல் உதவி செய்யும் நண்பனான ஸ்ரீஹரியை எதை செய்தும் மகிழ்விப்பது முடியாது. அவன் 'பக்த்யைக வஷ்ய ப்ரபு:'. ஆகையால் வெறும் இடைவிடாத பக்தியினால் மட்டும் அவனை பார்க்கமுடியும். ஸ்ரீஹரியைப் பற்றிய ஞானத்துடன் கூடிய பக்தி சிறப்பு. நம் சத்கர்மங்களின் இலக்கு ஸ்ரீஹரியின் அன்பை சம்பாதித்தலே. நம் சிந்தனை, செயல்கள் அனைத்தும் அதை நோக்கியே இருக்கவேண்டும்.

**சிராவண பகுள பஞ்சமி**

**அனைத்தும் ஸ்ரீஹரியின் கட்டுப்பாட்டில்**

ஸ்ரீஹரி சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன். யாருக்கும் எப்போதும் கட்டுப்படாதவன். அனாதி காலத்திலிருந்து அனந்த காலம் வரை அனைத்து ஜீவ ஜடங்கள் நிறைந்த உலகத்திற்கு ஒரே நியாமகன் (படைப்பவன்) அவனே. அனைத்து சாஸ்திரங்களால் போற்றப்படுபவன். ரமாதேவி முதல் சிறிய அணு/துகள் வரை அனைவரும் / அனைத்தும் அவன் கட்டுப்பாட்டில். வியாச சாகித்யத்தில் இருப்பதை ஹரிதாசர்கள் பலவிதமாக மொழிபெயர்த்துப் பாடியுள்ளனர். கூடவே ஜீவன் அஸ்வதந்த்ரன். ஸ்ரீஹரி ஆட்டுவிப்பதைப் போல ஆடுகிறது இந்த உலகம் என்று தம் கிருதிகளில் பாடியிருக்கின்றனர்.

ஹரியே நின்னாதீன சகல ஞானேந்திரியகளு
ஹரி நின்னாதீன சகல கர்மேந்திரியகளு
ஹரியே நின்னாதின்ன பஞ்ச பூதாத்மகளு
ஹரியே நின்னாதீன மன சித்தாதிகளு
ஹரியே நின்னாதீன சகல சேதனகளு
ஹரியே நின்னாதீன சகல சேஷ்டேகளு || --ஸ்ரீவிஜயதாசர்

குளிசிதரெ குணிவெ நகிஸிதரெ நகுவெ

மணிஸிதரெ மணிவெ உளிஸிதரெ உளிவெ
உணிஸிதரெ உணுவெ உடிஸிதரெ உடுவெ ||

தனது பல சுளாதிகளில் ஜீவனின் அஸ்வாதந்த்ரய, ஜீவனைப் படைப்பது பற்றி கோபாலதாசர் மிகத் தெளிவாக விவரித்திருப்பதை காணமுடியும்.

நானா யோனிகளல்லி ஜனிஸி பரலிக்கெ
நானா ஸ்வாதந்த்ரனேனோ பேளெலோ ஹரியே
நீனே ஸ்ருஷ்டிஸுவெ கர்மனெவன மாடி
ஏலோ கர்மகெ ஸ்வதந்த்ர நின்ன வினஹ உண்டெ
நீனெ காரண யோக்யத நின்னாதீன
ஏனாத கர்மத்வய நீனே மாடிபுவி
நீனே மாடிதெந்து நினகெ சமர்ப்பிதவு
நானு நின்னாதீன கோபாலவிட்டலா || -- ஸ்ரீகோபாலதாசர்

நாகர்த்தனெந்த தரிந்தலேவே சகல
ஷோகானர்தகளு ஜீவரிகொதகோது
நீகர்தனெந்ததரிந்த ஜீவரிகெ
நார்காத்யனர்தகளு ஆகலரியவய்யா || -- ஸ்ரீகோபாலதாசர்

**சிராவண பகுள சஷ்டி**

**’நான்’ என்பதை விடுவிப்பாய்**

நான், எனது, என்னால் – இப்படி சொல்வது ஒரு நோய். இதிலிருந்து யாரும் தப்பமுடியாது. ’தேனவினா த்ருணமபி ச சலதி’ ‘ஈஷாவாச்யம் இதம் ஜகத்’ என்றெல்லாம் வேத வாக்கியங்களின் பொருள் தெரிந்திருந்தாலும், ‘நான்’ மட்டும் போவதில்லை. இதற்கு விஜயதாசர் பதில் கொடுக்கிறார்.

நானே நானே எந்து பேளுவ மனுஜரு
நானா மாடனெகள படுவனு அனுதின
தீன மந்தார சிரிவிஜயவிட்டலரேய
நேனே மாள்பவனெம்ப பக்தர கை பிட ||

இதையே வேறொரு விதத்தில் கோபாலதாசர் வேண்டுகிறார். இது அனைவருக்கும் வழிகாட்டியாக இருக்கிறது.

தன்னனரியதெ அன்யர ஒல்லெனெம்புதகிந்த
கண்ணு இல்லத ஈ பரி மான உளிசய்யா ஆ
ஞானிகள முந்தின்ன மானகளெயய்யா
சுக்ஞானிகள முந்தெ நாம எம்புது பிடிஸு
சகல கர்த்ருத்வதொளு நீனு எம்போது திளிஸு
அல்லல்லி ஷ்வாஸ ஸூகர நானா யோனிகளு ப
ரலி ஞானவிது ஒந்தேயோ
தீனரொடெய ஞானமய கோபாலவிட்டல
மௌனிகளரஸ நமோ என்பேனோ ||

ஒவ்வொருவரின் மனதில் ஏதோ ஒரு மூலையில் நான் என்னும் கர்வம் இருக்கிறது. அந்த நான் (பெயர்ச்சொல்) மறைந்து, நான் (வினைச்சொல்) (என்னை நினைக்க வை) வந்தால், கண்டிப்பாக நாம் உயர்வோம். இந்தப் பொருளையே விஜயதாசர்:

நானு நன்னது அந்து நானு நன்னது இந்து
நானு நன்னது தந்து நானு நன்னது ஒந்து
நானு நன்னது வஸ்து நானெம்புது பிடதெ
நானிந்தலி கெட்ட நானெம்புதனு பிடிஸு
நீனே விஜயவிட்டலா ||

நானு நன்னது எம்ப மத பிடிஸோ
ஞான பக்தி விரக்தி கருணிஸோ || -- ஸ்ரீஷ்யாமசுந்தரதாசர்

**சிராவண பகுள சப்தமி**

**தெய்வ பலமே, பலம்**

ஸ்ரீபுரந்தரதாசர் தனது ஒரு பாடலில் 'சகலகிருஹ பல நீனே சரசிஜாக்ஷா' என்று, அனைத்திற்கும் ஸ்ரீஹரியே பலம் கொடுத்து, தனது கட்டுப்பாட்டில் வைத்திருப்பவர் என்கிறார். 'விவித தெய்வகளெல்ல விஷ்ணுவின ஹிந்தெ' என்று அதற்கே சொன்னார். நற்குணங்கள் நிரம்பிய, தோஷங்கள் அற்ற, ஞானானந்தமயனான, சர்வதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்ரீஹரி என்று

அவனை நினைத்தால் அனைத்தும், பலமும் (வலிமையும்) நமக்கு வரும். இதையே தாசர் இவ்வாறு சொல்கிறார்:

ஜய ஜய ஹரியெம்புதே சுதினவு
ஜய ஜய ஹரியெம்புதே தாராபலவு
ஜய ஜய ஹரியெம்புதே சந்த்ரபலவு
ஜய ஜய ஹரியெம்புதே வித்யாபலவு
ஜய ஜய ஹரியெம்புதே தெய்வபலவு
ஹய ஹரி புரந்தரவிட்டலன பலவய்யா சுஜனரிகெ ||

'மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்சய' என்றான் ஸ்ரீகிருஷ்ணன். 'அஹம் சர்வஸ்ய ப்ரபவ: மத்த: சர்வம்ப்ரவர்ததே' என்று கீதையில் சொன்னவை உண்மை என்று தாசர் இங்கு கூறுகிறார். திருமணம் முதலான மங்கல நிகழ்ச்சிகளில் கேட்கும் வேத மந்திரம்:

ததேவ லக்னம் சுதினம் ததேவ
தாராபலம் சந்த்ரபலம் ததேவ
வித்யாபலம் தெய்வபலம் ததேவ
லக்ஷ்மீபதே தேயங்க்ரியுகம் ஸ்மராமி ||

இந்த மந்திரத்தின் மொழிபெயர்ப்பே தாசர் கூறியது. இந்த மங்கல நிகழ்ச்சிகளில் தாசரின் வாக்கினை நினைவுகூர வேண்டும் என்பதே நம் விருப்பம். தினமும் சொல்லும் மங்களாஷ்டகத்தில் 'சத் த்ரைலோக்ய குடும்பபாலன பர: குர்யாத் ஹரிர் மங்களம்' என்று சொல்வதில் – ஸ்ரீஹரியே சர்வமங்கள புருஷோத்தமன் கூடவே அனைவருக்கும் மங்களத்தைக் கொடுப்பவனும் அவனே, அவன் கருணாமயி என்று சொல்லி வணங்கும் சம்பிரதாயம் நம்மில் உண்டு. தினப்படி வாழ்க்கையில் நம் உடலிலேயே ஸ்ரீஹரியை நினைக்கும் வழக்கம் வரவேண்டும். 'ஹரியெம்புதே சுதினவு' என்று சொல்கிறார் தாசர். 'இந்தின தினவே சுபதினவு' என்ற பாடலின் பொருள் இதுவே. அனைவருக்கும் ஸ்ரீஹரி நற்பலன்களைக் கொடுக்கட்டும் என்று வேண்டுவோம்.

**சிராவண பகுள அஷ்டமி**
**ஸ்ரீவியாசதத்வக்ஞரின் ஆராதனை**

இரு மொழிகளில் வல்லவரான இன்னொரு யதிகள் என்றால் அது ஸ்ரீவியாதத்வக்ஞர். ஐஜி வெங்கடரமணாசார் என்று பிரபலமான அறிஞர். கோபாலதாசரின் உறவினரான இவர், ஸ்ரீபுவனேந்திரரிடம் அசிரமம் பெற்று, வைராக்யசாலியாக, யதி ஆசிரமத்தின் கடமைகளான சாஸ்திர பாடம், சத்கர்மானுஷ்டாங்களை பின்பற்றலானார். பல புகழ்பெற்ற சிஷ்யர்களைப் பெற்றிருந்தனர். அதில் முக்கியமானவர் மாதனூர் ஸ்ரீவிஷ்ணுதீர்த்தர். பல கிரந்தங்களை இயற்றினார். பிடி சன்யாசியான இவர் - மானஸஸ்ம்ருதி, நியாயசுதா, சந்திரிகா போன்றவற்றிற்கு உரை எழுதி, வாசுதேவ விட்டல என்ற அங்கிதத்தில் பற்பல பாடல்களை - சுளாதிகளை இயற்றிய மகானுபாவர். சிறந்த ஞானி, வைராக்கிய குணம் கொண்டவர், தத்வபிரசாகரும் ஆன இவர் வேணிசம்புரத்தில் பிருந்தாவனஸ்தரானார். பின் வந்த ஹரிதாசர்க□□ இவரை நினைத்து, பாடல்களில் போற்றியுள்ளனர்.

ஆவஜெனுமதி சுக்ருத பலிஸிதெனெகெ
கோவிதாக்ரணி வியாசதத்வக்ஞர கண்டே ||ப||

ஜீவ சாமான்யரெந்தரியதிரி ஷாஸ்த்ரகள
நாவலோகனதி பேள்தரு நித்யதி |
தேவாம்ஷரிவரு சம்ஷயபடஸல்ல மா
யாவல்லபனு இவர ஹ்ருதயதொளகிருதிப்ப ||1||
கவிபிரீடித மஹாமுனிவியாஸக்ருத சுபா
கவதாதி கிரந்த வியாக்யான நோடி |
புவனேந்த்ரராயரா கருணதலி துரியாஷ்ர
மனவித்து வியாஸதத்வக்ஞரஹுதெந்த ||2||
ஈ ஜகத்ரயதொளகெ பூஜ்ய பூஜகர நி
ர்வ்யாஜதலி திளுபிதரு பக்தஜனகெ |
ஸ்ரீஜகன்னாதவிட்டலனொப்ப பூஜ்ய, பங்
கேஜபவ - பவரு பூஜகரெம்புவர நோட்த ||3|| -- ஸ்ரீஜகன்னாததாசர்

**ஸ்ரீகிருஷ்ண அஷ்டமி**

ஸ்ரீஹரியே சொன்னதுபோல 'யதாயதாஹி தர்மஸ்ய ..ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்' - 'தர்மத்தை நிலைநாட்டி, துஷ்டர்களைக் கொல்வதற்கு அவதாரம் எடுப்பேன்' என்றார். த்வாபரயுக முடிவில் ஸ்ரீகிருஷ்ணனாகி வந்தார். சர்வோத்தமனான மகாவிஷ்ணு அவதரித்தது இன்று ரோகிணி நட்சத்திரத்துடன் கூடிய அஷ்டமி நடுநிசியில். இதனை ஜெயந்தி என்று அழைத்தனர். ஏகாதசியைப் போல இன்று முழுக்க உபவாசம் இருந்து, சரியான நேரத்தில் கிருஷ்ண அர்க்யத்தைக் கொடுக்க வேண்டும். இதனால் நற்பலன்கள் கிடைக்கின்றன.

ஸ்ரீகிருஷ்ணனின் பாலலீலைகள் பாகவதத்தில் மிகச் சிறப்பாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. ஜீவர்களில் பாலலீலைகள் என்று புகழ் பெற்றிருப்பது ஸ்ரீகிருஷ்ணனுக்கு மட்டுமே. இந்தியாவின் பெரும்பாலும் அனைத்து மொழிகளிலும் இது மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. கன்னடத்திலும், ஹரிதாசர்கள் பல வகைகளில், பல ராக தாளங்களில் இயற்றி, பல வர்ணனைகளுடன் புகழ்ந்து, ஆடிப்பாடி, மகிழ்ந்தனர். புரந்தராதி ஹரிதாசர்களுக்கு ஸ்ரீகிருஷ்ணனின் பாலலீலைகளைப் பற்றி எவ்வளவு புகழ்ந்தாலும் திருப்தியில்லை. சிலவற்றைப் பார்ப்போம்.

ஜகன்மோகனனே கிருஷ்ண ஜகவ பாலிபனே |
ஜகதொளு நின்னய மஹிமெய பொகளுவெ ||

ஸ்ரீவாதிராஜரின் ருக்மிணீசவிஜயம், ஸ்ரீகிருஷ்ணனின் பிறப்பிலிருந்து துவங்கி, அவனது மகிமைகளை வர்ணிப்பதில் மிகச் சிறந்த காவியமாகியிருக்கிறது. கிருஷ்ண ஜெயந்தியன்று இந்த காவியத்துடன், ஹரிதாசர்களின் பாடல்கள், பாகவதம் 10ம் ஸ்கந்தம், பகவத்கீதை ஆகியவற்றின் பாராயணம் செய்து இப்பிறவிப்பயனை அடையவேண்டும். ஸ்ரீஹரியின் அனைத்து ரூபங்களும் ஒன்றேயானாலும், அவனின் கிருஷ்ணாவதார வர்ணனையை ஹரிதாசர் மெய்மறந்து வர்ணித்திருக்கின்றனர். கிருஷ்ணனின் பாலலீலைகளை பாடாத தாசர் இல்லை. இதற்கு முன்னிலையாக, வழிகாட்டியாக இருப்பது ஸ்ரீமதாசார்யரின் த்வாதச ஸ்தோத்திரம். ஸ்ரீஸ்ரீபாதராஜர் --

போபு ஹோகோண பாரோ ரங்க, போபு ஹோகோண | என்று துவங்கினார். இப்படி பாலலீலைகள் அல்லாமல், பகவத்கீதை, கோபிகீதா ஆகியவற்றை கன்னடத்திற்குக் கொண்டுவந்தனர். கிருஷ்ண என்னும் அங்கிதத்தில் பற்பல பாடல்களை இயற்றிய ஸ்ரீவியாசராஜர், பாலகிருஷ்ணனை கண்ணாரக் கண்ட தன்யர். ஒரு பாடலில் ‘கண்டே கனஸினலி காருண்ய மூருதி ஹரிய’ என்று கிருஷ்ணனை கொண்டாடியிருக்கிறார். ஸ்ரீகிருஷ்ணனின் நடனத்தை வர்ணிக்கும்போது:

ஒந்தொந்து தாளக்கெ ஒந்தொந்து பதகதி
ஒந்தொந்து ரபசக்கே மத்தொந்து கைகதி
ஒந்தொந்து பாவக்கெ ஒந்தொந்து நேத்ரவா
நந்ததி கோவர்தன நாட்யவாடே || -- ஸ்ரீவியாசராஜர்

ஸ்ரீவாதிராஜர், பாலகிருஷ்ணனை கண்ட விதமே வேறு. உடுப்பி கிருஷ்ணனின் பிரதான அர்ச்சகரான இவர் ‘கண்டே கண்டேனு கிருஷ்ண நின்ன திவ்ய மங்கள விக்ரஹ’ என்றார். கிருஷ்ணனை நேரடியாகக் கண்டு எழுதியவர். இத்தகைய அற்புத மகிமனான ஸ்ரீகிருஷ்ணனைப் பெற்ற யசோதையின் பெருமையை:

ஏனு சுக்ருதவ மாடிதளோ யசோதே
ஸ்ரீநிதியாத க்ருஷ்ணன கரெது முத்திஸுவளந்தெ || என்றார்

புரந்தரதாசருக்கு கிருஷ்ணனை எவ்வளவு புகழ்ந்தாலும் திருப்தியில்லை. பல பாடல்களில் வர்ணித்துள்ளார். ஜகதோத்தாரன் என்றே கண்டார். ‘ஜகதோத்தாரனா ஆடிஸிதளு யசோதே’ என்றார். மேலும்:

நோடி முத்யாடி மாதாடி சந்தோஷகாடி
பாடி பொகளுவேனு பரம புருஷ ஹரி | என்றார்

பின் ஒரு பாடலில் கோபியர்களின் துக்கத்தை கூறியிருக்கிறார்.

பாலதனதி பஹுலீலெகளிந்த கோபாலகரொடகூடி
ஒல்யாடுத நம்மாலயவனெ பொக்கு பாலு பெண்ணெய மெத்து
நளினனாபனெ நின்னொலுமெகெ ஸிலுகித
நளின நேத்ரெயர நிந்தெகெ குடிமாடி ||

மாரஜனக புரந்தரவிட்டல
காரு மாடதெ நம்ம ஸேரி சுகிசுதிரு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

உடுப்பியின் கிருஷ்ணனை ஸ்ரீகனகதாசர் பற்பல பாடல்களில் பாடியுள்ளார்.

கரதலி கொளலநூதுத்தா பாடுத்தா | ஸரிகமபதனி ஸ்வரகள நுடிசுத்தா |
பரிபரி விததலி ராகவ நுடிசுத்தா | துரு ஹிண்டுகள கொடுவ பாடுத ||

ஹரிதாசர்கள் கிருதிகளை இயற்றி, பாலகிருஷ்ணனின் மகிமைகளை வர்ணித்தது, இவற்றின் உரைகள் ஆகியவற்றைச் சேர்த்தால் ஒரு பெரிய நூலகமாகவே வரும். பிரசன்னவேங்கடதாசரின் பாகவத பத்தாம் ஸ்கந்தத்தின் உரையை படிக்கவேண்டும். இன்று நம்மால் முடிந்த - ஹரிதாசர்களின் கிருதிகளின் பாராயணம், பஜனை, இவற்றை கேட்டு, பாடி, மகிழ்ந்து தன்யராவோம்.

**சிராவண பகுள நவமி**
**உடுப்பி கிருஷ்ணன் - மத்வசரோவரம்**

மத்வசரோவர ஸ்னான முத்து கிருஷ்ணன த்யான |
ஷுத்தனாகி மாடெ விஜயவிட்டல காவ || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமதனந்த ஷயனதிந்த
ஸ்ரீமதனந்த ஷயன பந்த
ஸ்ரீமத்வாசார்யர மனெதெய்வ
ஸ்ரீமத் த்வாராவதியிந்த பந்த
ஸ்ரீமத் உடுபின கிருஷ்ணராய பந்த
ஸ்ரீபதி புரந்தரவிட்டலராய பந்த || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஹரிதாசர்களின் இதயதெய்வம், நிரந்தரமாக அவர்களை காப்பாற்றிக் கொண்டிருக்கும் தெய்வங்கள் - திருப்பதியின் திம்மப்பா, பண்டரபுரத்தின் விட்டலா மற்றும் உடுப்பியின்

கிருஷ்ணன். இந்த தெய்வங்களைக் காணாத, பாடாத ஹரிதாசர்கள் இல்லை.

நிர்மத்யோக்ர பவார்ணவே நிஜமனோபீஷ்டம் திஷாமீதி ய:
சமக் ஞாபயிதும் கரேண விலசன்மந்தானமன்யேன ச ।
ரம்யம் தாம ததன் மஹேஷ ரஜதக்ராம த்ரியோऽலங்க்ருதி:
கர்மந்தீஷ்வர பக்திபந்தனவஷ: ப்ரீதோऽஸ்து கிருஷ்ண: ப்ரபு: ॥ -- ஸ்ரீவாதிராஜர்

ஒந்து கரதலி நீணு ஸிரி ம
த்தொந்தரலி கடகோலு வரமணெ
யிந்த ஷோபிப நாபி தாவரெ பக்ஷ கிரிகொள்ளு ।
சந்த்ரனந்தலி வதன சமதலி
நிந்த பாத மனோஹரோரு
த்வந்த்வ கிருஷ்ணன மூர்த்தி நோள்பர நமன சுக்ருத பல ॥ -- ஸ்ரீவாதிராஜர்

உடுபிய கிருஷ்ண சகல ஜகதீஷ ।
பிடதென்ன சலஹோ மத்வஹ்ருதயவாசா ॥ -- ஸ்ரீவாதிராஜர்

உடுப்பி புரவாஸ சஜ்ஜனர போஷ பரமேஷ
உடுராஜவரத ஸ்ரீகிருஷ்ண
ஜடஜமார்கண கோடி லாவண்ய மத்வபதி
கடகோலு பிடித ஸ்ரீகிருஷ்ண
ஸ்ரீவதன குமுத சந்த்ரம சிதானந்தமய
சேவகப்ரிய கிருஷ்ண ॥ -- ஸ்ரீவியாசராஜர்

மத்வசாஸ்திர பிரவசன முத்து கிருஷ்ணன தருஷன ।
சித்த விஜயவிட்டலன்ன பொந்தி கொண்டாடுவரிகெ ॥
ஆனந்த ஆனந்த மத்தெ பரமானந்தா ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீகிருஷ்ணனின் தரிசனத்தைப் பெற்று, அவனின் பிரசாதத்தை ஸ்வீகரிப்பது மிகச் சிறந்த செயல் என்றார் ஸ்ரீவிஜயதாசர்.

கிருஷ்ண சந்தருசனவு ம்ருஷ்டான்ன போஜனவு
கஷ்டனாஷன சர்வகர்ம முக்தி ।
இஷ்டார்த்த சுகசௌக்ய ஆவக்ஷேத்ரதி காணே

ஸ்ருஷ்டிகொடெயா விஜயவிட்டலனு தயவாகெ ||

ஆவ ஜனமத புண்ய பலிஸிதெனகெ
ஈவுடுபி கிருஷ்ண ப்ரஸாத புஞ்சிஸிதெ || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீகனகதாசர், கிருஷ்ணனைக் கண்டு தன்யராகி பாடிக் கொண்டாடுகிறார்.

மத்வ சரோவரத்தில் ஸ்னானவ கெய்து
சித்தாந்த கர்மகளன்னனுஸரிஸி
ஷுத்தாத்ம கிருஷ்ணன தேவாலயவ ஸாரெ
போர்துவ சத்ய லோகத சபெயொளகெ ||

மெரெவ மத்வதீர்த்த பாஹிர வரண உதகவென்னி
சரிசுவந்த சுகுண த்ருணாத்யரு முகுதியோக்யரஹுது ||

மத்வ சரோவரதலி இத்து பூஜெய கொம்ப
முத்து விஜயவிட்டலன பித்தெ நின்னய பதகெ || -- ஸ்ரீவிஜயதாசர்

க்ருதயொளகிதெ அனந்த சரோவர
த்ரேதாயுகதலி வருணதீர்த்தவு
மித த்வாபரதி சந்த்ரபுஷ்கரிணியினெஸீக
க்ஷிதியொளகெ மஹதீர்த்த மத்வசரோவரவு || -- ஸ்ரீவிஜயதாசர்

மத்வசரோவரதி ஸ்னான மாடிரோ
முத்து கிருஷ்ணன தருஷன படெயிரோ ||

தென் - பத்ரி என்று அழைக்கப்படும், ஞானானந்தங்களைக் கொடுக்கும், சம்சார துக்கங்களைப் போக்கும் சிறந்த மருந்தான உடுப்பியின் முத்துகிருஷ்ணன் ஸ்ரீமதாசார்யருக்குக் காட்சியளித்து, துவாரகையிலிருந்து வந்து நின்றான். அஷ்டமடாதீசர்களிடம் பூஜை பெற்று, பக்தர்களுக்கு வரம் அளிப்பவனாக இருக்கிறான். ஸ்ரீமதாசார்யர், சஜ்ஜனர்களுக்கு ஞானத்தை அருள்வதற்காக, துக்கங்களை நீக்குவதற்காக, விருப்பங்களை நிறைவேற்றுவதற்காக, ஸ்ரீகிருஷ்ணனை பிரதிஷ்டை செய்து, தன்யரானார்.

**சிராவண பகுள தசமி**
**தாசன் என்று சொல்லிக்கொள்வது பிறவிப்பயன்**

ராமாயணத்தில், அசுர அரசன் ராவணன் முன் நின்று ‘தாசோஹம் கௌசலேந்த்ரஸ்ய’ என்று பயமே இல்லாமல் கூறினார் ஹனுமான். பின்னர் அவரே பீமன் & மத்வராகப் பிறந்து, செய்ததும் அதுதானே? ஒரு பரம்பரையே இந்த அவதாரங்களைப் பின்பற்றி சத்கதி அடைந்தது. ஒரு ஹரிதாசனாவது பல பிறவிகளில் செய்த நற்பலன்கள் என்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர்

தாசனாகுவுதக்கெ ஏசேசு ஜென்மத சுக்ருத
பாசுரரவி கோடி ஸ்ரீஷ குணவந்த
நாஷரஹித நின்ன தாசர தாஸ்யவ
லேஸாகி கொடு கண்ட்யா புரந்தரவிட்டலா ||

தாசன மாடிகோ என்ன - என்னும் தாசரின் வேண்டுகோள் நம் அனைவரின் விருப்பமாக இருக்கவேண்டும். அப்போது மட்டுமே பக்தி என்னும் சொல்லிற்கு நற்பொருள் கிடைக்கிறது. இதுவே ஈச-தாச பாவம். ஸ்ரீஹரியிடம் என்னை தாசனாக ஏற்றுக்கொள் என்று தாசர் இவ்வாறு கேட்கிறார்:

நின்ன தாச நா அஞ்ஞானியாதரெ
கர்த்ரு நீ பொரெயதிருவுதேனோ புரந்தரவிட்டலா ||

இன்னொரு இடத்தில்: ‘மரெயதெ ரக்ஷணெமாடென்ன’ என்றும் மறுபடி:
தாசனெந்தாகுவேனு தரெயொளகெ நானு |
வாசுதேவனலி லேஷ பகுதி காணே ||

என்று வேண்டுகிறார். அதாவது இந்தப் பிறவியில் எப்படியாவது சாதனைகளைச் செய்து தாசன் என்று சொல்லிக் கொள்ளவேண்டும் என்ற விருப்பத்தில், என்னை தாசனாக ஏற்றுக்கொள்ளய்யா என்று வேண்டுகிறார். இன்னொரு உகாபோகத்தில்:

நின்ன தாசனு ஆகி நின்னெஞ்சலுண்டவன
நீனு உதாசீன மாடிதரெ லோகரு நகரெ
நின்ன சரனகமலவனு கொரளல்லி கட்டுவெ
என்ன காயோ புரந்தரவிட்டலா ||

இந்த சிந்தனை மனதில் ஆழத்திலிருந்து வந்தால், தாசன் ஆவது எத்தகைய பிறவிப்பயன் என்பது தெரியும். நிஜ தாசன் என்று நினைத்த புரந்தரதாசர், தம் குருவிடமிருந்து பெற்ற ஆசி - தாசரெந்தரெ புரந்தர தாசரய்யா'.

**சிராவண பகுள ஏகாதசி**
**பந்தங்களிலிருந்து என்னை விடுவி**

மனிதன் வாழ்க்கையில் தவறு செய்வது சகஜம். யாரும் இதிலிருந்து தப்ப முடியாது. ஆனால் இதிலிருந்து எப்படி திருத்திக் கொள்வது என்பதையே சிந்திக்க வேண்டும். அப்போதே இறைவன் காட்சியளிப்பான். இதைப் பற்றி ஸ்ரீபாதாராஜர் சொல்வது:

பரர பாகில காய்து பொய்யென்ன சம்சார
பரர பாடி பாடி பொய்யென்ன ஜன்மவு
பரர பொகளி பொகளி பொய்யென்ன நாலிகெ
பரம கருணாகரனெ பொட்ட பெட்டவ கண்டு
பர ம்ருககளு ஒதரிதந்தெ ஹருஷவாகுவுதேனோ
கல்லு கோவின ஹாலு கரு பயசுவந்தெ
அகடகட மந்தமதியு நானல்லவெ
பல்லிதராஸெ பிடிஸோ சிரிரங்கவிட்டலரேயா ||

இன்னொரு உகாபோகத்தில் ஸ்ரீபாதராயர் - என் நிலை இப்படி ஆயிற்றே (நம் அனைவருக்காகவும் சொன்ன வாக்கு). எப்படியோ நேரம் போயிற்று. கருணாகரனான நீ என்னை காப்பாற்று என்கிறார்.

என்ன மன விஷயங்களல்லி முணுகிதோ
என்ன தனு வ்ருத்தாப்யவனு இடிதோ
அந்தகர கரெ பாஹொ ஹொத்தயிதோ

கால விளம்பன வினிதில்லவய்யா வ்யாள்ளவரிது பின்னஹ மாடிதெ
ஹீகெ தரளர பிடுவ தாயிகளுண்டே
நீ கருணநிதியியெம்ப பிருது சல்லது தேவ
கருணாகர சிரிரங்கவிட்டலரேய
நீ கருணநிதியியெம்ப பிருது சல்லது தேவ
கால விலம்பவு இனிதில்லவய்யா
வ்யாள அரிது பின்னஹ மாடிதே ||

சத்கதியை விரும்புபவர்கள் பகவந்தனை விடாமல் கேளுங்கள் என்று சொல்கிறார். நம் அனைவருக்கும் அவனே கதி.

அனந்தகாலதல்லி யாவ புண்யதல்லி என்ன மன நின்னல்லி எரகிஸோ
என்ன மன நின்ன சரணதொளொம்மெ இட்டு சலஹொ ரங்கவிட்டலா ||

**சிராவண பகுள த்வாதசி**

**சாதனைக்கு தக்க பலன்**

அக்கம்பக்கத்தவரைப் பார்த்து அவரிடம் இருப்பது நம்மிடம் இல்லை என்று வருத்தப்படுகிறோம். வரவுசெலவுகளை ஒப்பிட்டு கவலைப்படுகிறோம். செல்வம், புகழ், அதிகாரம், அந்தஸ்து இவற்றின் பின் அலைந்து நேரத்தை வீணடிக்கிறோம். இவற்றிற்கெல்லாம் காரணம் வேறு ஒன்று இருக்கிறது என்கிறார் புரந்தரதாசர். அவர் சொல்வது:

எஷ்டாதரு முன்ன கொட்டில்லதில்ல பட
தஷெயல்லதெ பேரே பயஸிதரில்ல
யாரார மனெகளிகெ ஹோகி பந்தரு இல்ல
ஊரனாளுவ தொரெய சேரிதரு இல்ல
நீரொளகெ முளுகி தா ஜபவ மாடிதரில்ல
ஹேரள வித்யெகள கலிதரில்ல
தன்னொடனெ புட்டிஹர பாக்யவு தனகில்ல
ஹெண்ணின தஷெயிந்த பாள்ஹோதல்ல

அன்யரனு நோடி தா கரகி கொரகிதரில்ல
தன்ன மக்களு படெத புண்ய தனகில்ல
பிட்டி துடிது பாயிபிட்டு பேடிதரில்ல
கட்டாளு தானாதரேனு பலவில்ல
ஸ்ருஷ்டியொளகெ நம்ம புரந்தரவிட்டலன
மட்டி பூஜிஸிதருணலுண்டு உடலுண்டு ||

மனிதப்பிறவியின் ரகசியத்தை, சாதனையின் பலன்களை, வாழ்க்கையின் அர்த்தத்தை அழகாக மற்றும் சிறப்பாக இந்த உகாபோகத்தில் தெரிவிக்கிறார் ஸ்ரீபுரந்தரதாசர். இந்த வாழ்க்கையில் வரும் பிரச்னைக்கான காரணங்களைக் கொடுத்து, இதிலிருந்து முக்தி அடைவதற்கு, பின்பற்ற வேண்டியதான வழியை தெரிவிக்கிறார். இருப்பதில் திருப்தியடைந்து, தன் முந்தைய இன்றைய சாதனைகளுக்காக, ஸ்ரீஹரி நம்மை காப்பாற்றுவான் என்று அறியவேண்டும், நம் பிரச்னைகளுக்கு வேறு யாரும் காரணம் இல்லை. நானே காரணம் என்று அறிந்து சாதனைகளில் ஈடுபடவேண்டும். அனைத்திற்கும் மூலகாரணனான ஸ்ரீஹரியை சரணடைய வேண்டும். உண்மையான நிலையை தெரிவித்து, மனதிற்கு நிம்மதியைக் கொடுக்கிறார் தாசர்.

சாதனகெ எணெகாணெ என்னபஹுதே..

**சிராவண பகுள த்ரயோதசி**
**ஸ்ரீஹரியை மறந்தால் என்ன ஆகும்?**

மனிதன் தன் சாதனைகளை செய்வதற்கு தக்க ஞான பக்தி வைராக்கியத்தை அடையவேண்டும். இவை அனைத்தும் நம்மில் உண்டு என்று ஸ்ரீவாதிராஜர் சொல்கிறார். ஆனால் இவை நம்மிடம் இல்லாதவை என்று பொருள் வருமாறும் தொனிக்கும் இந்தப் பாடலை பார்ப்போம்.

சம்சாரதல்லி ஞான, சதி சுதரலி பக்தி
கம்சாரி பூஜெயலி வைராக்ய விஷயகளலி த்யான
லௌகீகதலி மன வசுதெ துர்ஜனர கதெ கேளுவுதே ஸ்ரவண

ஹசனாகி எணிசுவ ஹண ஹொன்னின ஜப

பிஸிலொளகெ சஞ்சரிசுவுதே மஹாதபவு
உதரத யாத்ரெயெ மஹாயாத்ரெ
அன்யத ஹேளுவுதெ மந்த்ர முந்தாத தனவனு கொட்ஹாகி
ஸ்ரீஹயவதன நா நின்ன மரெதெ || -- ஸ்ரீவாதிராஜர்

எந்த விஷயங்களில் மனிதனுக்கு விருப்பம், சிரத்தை, பக்தி ஆகியவை இருக்கவேண்டுமோ, அதற்கு எதிர்ப்பதமான விஷயங்களிலேயே அவை இருக்கின்றன. இப்படி இருந்தால் சத்கதி எப்படி கிடைக்கும்? என்றாவது ஒரு நாளாவது இந்த சிந்தனை நமக்கு வரட்டும் என்று ராஜர் வேண்டுகிறார். சிறந்த பண்டிதன், குணவந்தன், அன்பானவன், செல்வந்தன் என்றெல்லாம் சொல்கிறார்கள். இவையெல்லாம் கேலிப்பேச்சு என்று அறிந்து, சாதனைக்கான வழியை அடையவேண்டும்.

மேற்கண்ட வாக்கினை ஏற்று நடந்தால் அதற்கான முடிவு எப்படியிருக்கும் என்பதை புரந்தரதாசர் சொல்கிறார்.

மன சன்சலதி தபவ மாடலஷக்யவு
கன அஞ்ஞானதி சத்கர்மகளு ஹத்தவு
தன ஷுத்தியில்லதெ தானவு வ்யர்த்தவு
மன ஷுத்தியில்லத த்யானவு வ்யர்த்தவு
இனிதாத்தரிந்த ஈ யுகதி புரந்தரவிட்டலா
நாமஸ்மரணெயே லேஸு லேஸு கணா ||

நம்மை பூமிக்கு கொண்டுவந்து, உடலைக் கொடுத்து, சாதனைவழியில் ஈடுபடுத்தி - இப்படி அனைத்தையும் செய்தவனை மறந்தால் அது சரியா? வீணே. கெட்ட பிறவிகளே வரும். ஒவ்வொரு கணமும் ஸ்ரீஹரியின் சிந்தனை இருந்தால், பிறப்பு இறப்பு சுழற்சியிலிருந்து நாம் தப்புவோம்.

**சிராவண பகுள சதுர்தசி**
**உபநிஷத் தேவதா விவரம்**

அனாதி காலத்திலிருந்து இருக்கும் வேத மந்திரங்களுக்கு ரிஷி, சந்தஸ், தேவதா ஆகியன இருக்கின்றன. இவற்றை சொல்லியே,

மந்திரத்தை சொல்லவேண்டும் என்று விதி இருக்கிறது. இதையே ஸ்ரீமதாசார்யர் தனது உபநிஷத் பாஷ்யங்களில் சொல்லியிருக்கிறார். எந்தெந்த உபநிஷத்களுக்கு யார்யார் தேவதை என்று நினைவில் கொள்வது சுலபமாகட்டும் என்று ஸ்ரீவிஜயதாசர் தொகுத்து கொடுத்திருப்பது இது. ஸ்ரீமதாசார்யர் பத்து உபநிஷத்களுக்கு பாஷ்யங்களை எழுதியிருக்கிறார். அவற்றின் 'அதிதெய்வ' - ஸ்ரீஹரியின் ரூபங்கள்.

ஈஷாவாஸ்யக்கே யக்ஞ நாமனதேவ
லேஸு அதர்வணக்கே புருஷோத்தமனு தேவதெ
வாசுதேவன நெனஸு ஷட்ப்ரஷ்னக்கே ஜக
தேஷ நாராயண தளவகாரகெ தேவதெ
பூஷண வாமனனு காடக ப்ரதிபாத்ய
கோஷ ரூபகள்ளெது தைதரீயகெ சித்தா
பாஸித விஷ்ணு ஐதரேயகெ பேளி
சேஷசயன ரூப சாந்தோக்ய பாஷ்யக்கெ
ஸ்ரீஷனு ப்ருஹதாரண்யக்கெ
ஈஸு வேதாந்ததல்லி ஹரிய த்யானவ மாடி
தோஷராசிகளிந்த நிர்மலனாகுவேனோ || -- ஸ்ரீவிஜயதாசர்

இந்த உபநிஷத்களின் மற்றும் அவற்றில் (ப்ரதிபாத்யன்) புகழப்படும் தெய்வங்களின் ரூபங்களை அறிவது நற்பலன்களைக் கொடுக்கும் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ரூபங்களுக்கும் ஸ்ரீஹரிக்கும் வேறுபாடுகள் இல்லை என்று அறியவேண்டும். இந்த உபநிஷத்களில் அடங்கியிருக்கும் ரகசியம், விஷயங்களை ஹரிதாசர்கள் தம் க்ருதிகளின், சுளாதிகளின் மூலம் சொல்லியிருக்கின்றனர். ஆக இவர்களின் க்ருதிகள், சம்ஸ்கிருத வேதாந்த கிரந்தங்களின் மொழிபெயர்ப்பே ஆகியிருக்கின்றன. பத்து உபநிஷத்களின் சாரத்தை தாசர்கள் அங்கங்கு விளக்கியிருக்கின்றனர். ஸ்ரீஜகன்னாததாசர், தனது மேரு-கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தில் பற்பல விஷயங்களை தொகுத்து அனைவருக்கும் மிகப் பெரிய உதவியை செய்திருக்கிறார். அதற்கு இதனை 'ஸ்ருதி ஸ்ம்ருதிகெ சம்மத...' என்றது பல-ஸ்ருதி.

**சிராவண அமாவாசை**

**ஸ்ரீமுக்யபிராணர்**

ஸ்ரீஹரிக்கு மிகவும் அன்பானவர். நேரடி பிரதிபிம்பர் வாயுதேவர். உலகத்திற்கு பிராணர் - காப்பவர் ஆன இவரே முக்யபிராணர்.

சர்வதேவோத்தமோ வாயுரிதி ஞானான்ன சார்பம் |
ப்ரியமஸ்தி ஹரெ: கிஞ்சித் ததா வாயோர் ஹரேர்வித: ||

ஜீவோத்தமரான வாயுதேவர் சூத்ரநாமகர் (வேதங்களில் புகழப்படுபவர்). இவரை அறிந்துகொண்டால் மட்டுமே இந்த பிராணநாதனின் நாதனான விஷ்ணுவை அறிவது சாத்தியம். இப்படியாக ஜகத்குரு எனப்படுகிறவர் வாயுதேவர்.

ஈதனே லோககுரு வேதவிக்யாத |
பூதளதொளு ராமதூதனெ || -- ஸ்ரீவாதிராஜர்

ஜாண நீ நஹுதோ குருமுக்ய பிராண நீ நஹுதோ ||
ராணி பாரதிரமண நினகெணெ
காணெ த்ரிபுவனதொளகெ || என்று கொண்டாடுகிறார் ஸ்ரீவியாசராஜர்

ஸ்ரீபுரந்தரதாசர், வாயுதேவரை மூலகுரு என்று அழைத்து, அனைத்தும் நீயே என்று சொல்லியிருப்பது இப்படி:

முக்யப்ராண என்ன மூலகுருவே ||ப||
ரக்ஷசாந்தக ஸ்ரீராமன நிஜதாஸ ||அப||

தந்தெ நீனே எனகெ தாயி நீனே எனகெ
பந்து நீனே எனகெ பளகவு நீனே
எந்தெந்திகு நம்மெல்லர ரக்ஷிபனு நீனே ||1||

தாத நீனே எனகெ கர்த நீனெ எனகெ
வித்த நீனே எனகெ விபவ நீனே
சத்ய நீனே எனகெ சதாசாரவு நீனே ||2||

சுகவு நீனே எனகெ சுலபனு நீனே எனகெ
ஏகாந்த ஸ்ரீபுரந்தரவிட்டலன
பகுத நிஜதாஸ நீனே ||3||

ஞான, பல, ஆனந்தங்களினால் நிரம்பியவர் இந்த வாயுதேவர். 'ப்ராணோ பிரம்ம பலரூபம், ஞானரூபம்' என்று வேதங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீஹரியைப் போலவே அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் இவர், முந்தைய கல்பத்தில் பிரம்ம பதவிக்கு வருபவர் ஆவார்.

இந்த பிரம்மாண்டத்தை கூர்மரூபியாக அணிந்திருப்பவர் வாயுதேவர். ஸ்ரீபாதராஜர்:

ஆவகச்சப ரூப திந்தலண்டோதகதி
ஓவி தரிஸித சேஷ மூருதியனு || என்றார்.

இந்த அனைத்து சக்தியும் முக்யபிராணருக்கு வருவதற்கு, விஷ்ணுவின் அருளே காரணம். 'விஷ்ணும் சமாஸ்ரித்ய ப்ராணோ ஜீவான் பிபர்த்யயம்'. அனைத்து ஜீவர்களின் பிராணனுக்கும் காரணம் பிராணதேவரே. அதற்கே ஜகன்னாததாசர்:

அபம்ருத்யு பரிஹரிஸோ அனிலதேவ |
க்ருபணவத்ஸலனெ காவர காணே ஜகதொளகெ ||

நினகின்னு சமராத அனிமித்த பாந்தவரு
எனகில்ல ஆவாவ ஜனுமதலி
அனுதினவு எம்மன்னு உதாசீன மாடுவது
அனுசிதனு சிதவு சஜ்ஜன சிகாமணியே ||1||

கரணாபிமானிகளு கிங்கரரு மூர்லோக
தொரெயெ நின்னொளகிப்ப சர்வகால
பரிசரனெ ஈ பாக்ய தொரெதனகெ சரியுண்டே
குருவரனெ நீ தயாகரனெந்து பின்னெயிபே ||2||

பவரோக மோசகனெ பவமான ராய
ஞானாயரூபகனு நீனுஹுதோ
வேதவாதோதித ஜகன்னாதவிட்டலன

பாதபஜனெயனித்து மோதகொடு சதத ||3||

ஸ்ரீபாதராஜர் தமது மத்வநாமாவில் உலகத்தின் பிராணன், த்ராணன் (காப்பாற்றுபவன்) இவரே என்று கூறுகிறார்.

ஆவவனு தேஹதொளகிரலு ஹரி நெலசிஹனு
ஆவவனு தொலகெ ஹரி தா தொலகுவ
ஆவவனு தேஹத ஒள ஹொரெகெ நியாமகனு
ஆவாயு நம்ம குலகுரு ராயனு ||

ஜகத்குருவான பிராணர் (அனைத்து இந்திரியங்களையும் நடத்துபவர் - 'அன சேஷ்டாயாம் பிராண:') - ஸ்ரீஹரியின் பிரதிபிம்பராகி முக்தியோக்ய ஜீவர்களை ஸ்ரீஹரியிடம் அழைத்துப் போகிறார். இத்தகைய பிராணதேவரைப் பற்றி ஸ்ரீமதாசார்யர்:

ஏதம் விவித்வா சம்சாரான் முக்தீயேஷ்ட்யத்ய சம்ஷயம் |
விஷ்ணுமப்யந்ததோ வேத்தி பிராணவேத்தாயத: ஸ்புடம் ||

பிரம்மகல்பம் முடியும்வரை, அனைத்து ஜீவர்களிலும் சுவாஸ-ஜபத்தை செய்து செய்வித்து, அவர்களின் தகுதிக்கேற்ப, அவர்களுக்கு கதியைக் கொடுத்து காப்பாற்றுபவர் வாயுதேவர். அதற்கே 'குருபவமான சலஹெம்ம' என்றார். 'ஹனுமன மதவே ஹரிய மதவு, ஹரிய மதவே ஹனுமன மதவு' என்றார். ஏனென்றால் 'வாயும் வினான்யைவ சித்திர்ஹரேஸ்சதா'. ஸ்ரீஹரி அனைத்து காலங்களிலும் வாயுதேவருடனேயே இருக்கிறார். இவரின் நிஜ-பத்னி பாரதிதேவி - ருஜுகணர்களின் அரசி.

பிரளய காலத்திலும் அழியாத ஞானம் வாயுதேவரது. வாயுதேவரின் மூன்று அவதாரங்களிலும் ஞான, பல, ஆனந்தம் என அனைத்தும் ஒரே மாதிரியானவை. பகவத் கார்ய சாதகராகி, அவனின் ஆணைப்படி, சஜ்ஜனர்களை காப்பாற்றுவதற்காக அவதரித்து வந்தவர்.

ஹனும பீம மத்வரான வாயுதேவரின் அவதாரங்களைப் பற்றி ஜகன்னாததாசர் பாடியது:

பவமான நம்ம குரு பவமான

பவமான பாவன சரித, பத்ம
பவன பதார்ஹனெ நிரத, ஆஹ
ஷ்ரவணவெ முதலாத நவவிதபக்தி ஞா
நவனித்து சலஹோ மூரவதாராத்மக தேவ || -- ஸ்ரீஜகன்னாததாசர்

பவனனெந்தரெ பாபபரிஹாரவாகுவுது
பவனனென்னெ பவித்ரனாஹ பாரதி
தவ ஜீவாத்ம நின்ன மக முக்ய குருவெனலு
பவனதல்லித்த தன்ன நூரொந்து குலகோடி
தவகதிந்தலி சுபதகைதிசுவ
பவதூரனாகுவ தசப்ரமதியெந்தென்ன
கவியாகுவனு, ஹனும பீமனன்னெ
நவவித பகுதிலி பூர்ணகுணனா
குவ சுகதீர்த்த மத்வமுனிராயனெனலு
பவனாந்தர்கத ஸ்ரீரகுபதிவிட்டலரேயன தோ
ருவ ஹரிகெ ப்ரதமாங்க வாயு || -- ஸ்ரீரகுபதிவிட்டலதாசர்

வாயுவிகெ சமரில்ல ஜகதொளு
வாயுதேவரே பிரம்மரு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

‘ச ஏவம் ப்ரஹ்மகமயதி’ ஸ்ரீஹரியிடம் நம்மை அழைத்துப் போவார் இந்த வாயுதேவர்.

**பாத்ரபத சுத்த ப்ரதமை**
**ஆபத்து வரட்டும். உன் சிந்தனை இருக்கட்டும்**

மகாபாரதத்தில், கிருஷ்ணனிடம் குந்தி ‘விபத: சந்து ந: ஷஷ்வத் தத்ர தத்ர ஜகத்பதே’ என்று வேண்டினார். வாழ்க்கையில் எப்போதும் ஆபத்து, விபத்துகள் வரட்டும். இது விசித்திரமானாலும் சரியே. ஸ்ரீஹரியிடம் பக்தி வருவதற்கு, நோய், நொடி, தோல்வி தேவைப்படுகிறது. ஸ்ரீபுரந்தரதாசர் பகவந்தனில் வேண்டியது இதை:

ஹரி நீ ஒலிவந்தெ மாடு | ஒலிதரெ திருவந்தெ மாடு |
திரிதரெ தாரு நீடதந்தெ மாடு |
நீடிதரெ ஹொட்டே தும்பதந்தெ மாடு |

ஹொட்டெ தும்பிதரெ பட்டெ தொரெயதந்தெ மாடு |
பட்டெ தொரெதரெ இம்பு தொரெயதந்தெ மாடு |
இம்பு தொரெதரெ நின்ன பாதாரவிந்ததலி இம்பிட்டு
சலஹோ ஸ்ரீபுரந்தரவிட்டலா ||

இங்கு சொல்லப்பட்டிருக்கும் ரகசியம் இதுவே. மனிதன் 'சங்கட பந்தாக வெங்கடரமண' என்கிறான். என்றால் வாழ்க்கையில் விபத்து, பிரச்னைகள் வந்தால், அதற்கான தீர்வுகள் தெரியாமல் இருந்தால், யாரும் உதவிக்கு இல்லையென்று எண்ணுவது சகஜம். அந்த சமயத்தில் நினைவுக்கு வருபவரே - ஸ்ரீஹரி. எப்போதும் ஸ்ரீஹரியின் நினைவு மனதிலிருந்து விலகாதிருக்க விபத்து, ஆபத்துகள் வரட்டும் என்றனர். இன்னொரு இடத்தில் தாசர் - 'காள கத்தலெ பந்து கவியபேகு' என்றார்.

நின்ன பக்தரெந்தெனிசுவ ஜனரு பங்கபடலிபேகு
தினப்ரதி அன்ய உதக வஸ்த்ரகாணதெ இரபேகு
பென்ஹெத்தி ரோககளு ஹத்தி இரலிபேகு
தன்னவர கையிந்த பே என்னிஸிகொள்ளபேகு
பன்னகஷயனா ஸ்ரீபுரந்தரவிட்டலா ||

'சதா என்ன ஹ்ருதயதல்லி வாச மாடோ ஸ்ரீஹரி' என்று கேட்கிறார் தாசர்.

**பாத்ரபத சுத்த த்விதியை**
**ஸ்ரீதன்வந்திரி ஜெயந்தி**

அமிர்தத்திற்காக தேவ அசுரர்கள் சேர்ந்து பாற்கடலை கடைந்தபோது அங்கு அவதரித்த ஸ்ரீஹரியின் ரூபமே தன்வந்திரி ரூபம். ஜீவர்களின் துக்கத்திற்குக் காரணமான நோய் நொடிகளைப் போக்குவதுடன், நம் பாவங்களை பரிகரிக்க வந்தவரும் இவரே ஆவார்.

தன்வந்திரி தீர்க்கதமஸ ஆயுர்வேத ப்ரவர்தக: |
யக்ஞ ப்ருக்வாசுதேவாம்ஷ: ஸ்ம்ருதி மாத்ரார்தினாஷன: || -- பாகவதம்

ஆயுர்வேதத்தை துவக்கியவர், பக்தர்களின் துக்கங்களைப் போக்குபவர், பகவந்தனான தன்வந்திரி. ஸ்ரீவிஜயதாசர் இயற்றிய – தினமும் படிக்கவேண்டிய பஞ்சரத்ன சுளாதியில் – தன்வந்திரி சுளாதியும் ஒன்று.

தன்வந்த்ரி ஸ்ரீதன்வந்த்ரி எந்து
சன்மதிஸ சதத பின்னஞானதிந்த
நின்னவ நின்னவனோ கன்னதியலி நெனெத
மன்னுஜ புவனதொளு தன்யனு தன்யனின்ன
சன்னமூர்த்தி சுப்ரசன்ன விஜயவிட்ட
லன்னு சத்யவெந்து பண்ணிஸு பஹுவிததி ‖ -- ஸ்ரீவிஜயதாசர்

தம் தன்வந்திரி எந்து ப்ரணவபூர்வகதிந்த
வந்திஸி நெனெயலு விஜயவிட்டல ஒலிவா ‖ -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமதாசார்யர் தந்த்ரசார சங்க்ரஹ கிரந்தத்தில் – ஆயுள், ஆரோக்யம் மேம்பாட்டிற்கும் மற்றும் கஷ்டங்கள் நீங்குவதற்குமான தன்வந்திரி ஜெபத்தை சொல்லி அருளியிருக்கிறார். தன்வந்திரி ஜெபத்தின் சித்தியுடன், கோபாலதாசர் ஜகன்னாததாசருக்கு ஆயுள்தானம் வழங்கினார் என்பது நாம் அறிந்ததே. அந்த சமயத்தில் அவர் செய்த பிரார்த்தனை:

என்ன பின்னப கேளோ தன்வந்திரி தயமாடோ
சன்னவனு இவ கேவல ।
பன்ன படிசுவ ரோகவன்னு மோசனெ மாடி
சென்னாகி பாலிசுவுது கருணி ‖

உன்மந்த குணபூர்ண கோபாலவிட்டல
இன்னிதனெ பாலிசுவுது ப்ரபுவே ‖ -- ஸ்ரீகோபாலதாசர்

தன்வந்திரி தன்வந்திரியெனெ வியாதி பரிஹார
வெனுதிஹ வசனகளு ‖ -- ஸ்ரீபிராணேசதாசர்

**பாத்ரபத சுத்த த்ருதியை**
**சுவர்ணகௌரி விரதம்**

ருத்ரதேவரின் நிஜ-பத்னி பார்வதிதேவி. இவரே சுவர்ணகௌரி. மகிழ்ச்சியைக் கொடுக்கும் தேவதை. விசேஷமாக பெண்களுக்கு நீண்ட மாங்கல்ய பலத்தைக் கொடுப்பவர். சிவனின் பாதி. சௌபர்ணி, வாருணியருக்கு சமமாக ஏழாம் வகுப்பில் வருபவர். நற்புத்திக்கு அபிமானி. இந்திரனுக்கு குரு. 'தாம்பர்த்யர்த்தம் உமாம் சதீம்' என்பதுபோல் கௌரி, தாம்பத்யம் மற்றும் சௌபாக்யத்திற்கான தேவதை. இதற்காகவே திருமண நிகழ்ச்சியில் கௌரிபூஜை. ஆண் பெண் என்று பேதமில்லாமல் அனைவரும் உமாதேவியை பூஜிப்பது வழக்கமாக இருக்கிறது.

உமா காத்யாயனி கௌரி தாக்ஷாயணி ஹிமவந்தகிரிய குமாரி |
என்ன மனத அபிமானி தேவதெயெ ஸ்வர்ணகிரி சம்பன்ன பாக்யநிதி |
நின்ன மஹிமெயனு பின்னாணதலி நா பண்ணிஸலளவே ப்ரசன்னவதனளே || -- ஸ்ரீவிஜயதாசர்

பார்வதி பாலிசென்ன மானினிரன்னெ ||ப||
பார்வதி பகுதர சாரதி வந்திபெ ||அப||
சுரபதி கஜமுக மூர்த்தி மாதெ
அனுக்ரஹிசென்னனு அபுஜவாணி ||1||
மங்களெ ம்ருடனந்தரங்களெ ஹரிபத
ப்ருங்களெ துங்களெ பன்னகவேணி ||2||
குணபூர்ண வேணுகோபாலவிட்டலன
காணிஸிகொடுவந்த ஷோலிய ராணி ||3||

இன்றைய தினம், பெண்கள் தலைக்குக் குளித்து, துளசி பூஜையை முடித்து, கௌரியை ஷோடசோபசார பூஜையினால் பூஜித்து, 16 முடிச்சுகள் போட்ட கயிற்றை கட்டிக்கொண்டு, வெற்றிலை பாக்குகளைக் கொடுத்து, சுமங்கலியருக்கு உணவளித்து - பூஜையை முடிக்கவேண்டும். சௌபாக்கியத்தை அளிக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு, அனைத்தையும்

(ருத்ராந்தர்கத) ஜெயாபதி சங்கர்ஷணனிடம் அர்ப்பிக்க வேண்டும். -- ஸ்ரீபிராணேசதாசர்

துர்கெ பவானி ருத்ராணி கௌரி | ஸ்வர்க்க ஜினாராத்யமானி சேரே
துர்கணதவர சுக்ஞானி பக்த |வர்க்க போஷக ஷுகவாணி ஆஹா
நிர்குணராதுத்தமர்கெ பொலிவ அப | வர்க்கத நாளெ நரர்கெ மணிஸதிரெ |
ஷாலிஸி ஷர்வாணி பன்னகவேணி |
பாலன மாதனு லாலிஸி பேகனெ | காலகாலக்கெ ஹரித்யான மாடிஸி |
நின்ன சமானதாதெ காணினோல்லா மாதெ |அன்யரபேடத உன்மத மன நீடே |
தோஷரஹித மாதெ ஸ்ரீஷவிட்டலதா | போஷிப நின்னய பாஷெ லாலிஸி பேக || -- ஸ்ரீசவிட்டலதாசர்

**பாத்ரபத சுத்த சதுர்த்தி**

**ஸ்ரீவினாயக சதுர்த்தி**

துஷ்டானாம் விக்னகர்த்தா சுசரிதசுஜன ஸ்தோம விக்னாபஹர்த்தா
தஸ்மாத்விகாதி போஷம் மத இதி சுதினாம் ஸ்பஷ்டமாஞாபனாய
பௌலஸ்யே ச்சாந்தராய: சுரமுனி நிகரா பீஷ்மசம்ப்ராப்யபாய:
ஸ்ரீஇயோ விக்னாதிராஜ: ப்ரதிஷது சததம் பூரி கௌரீதனூஜ: ||

ஜயஜயது விக்னேஷ தாப
த்ரயவினாசன விஸ்வமங்கள
ஜய ஜயது விக்னப்ரதாயக வீதபயசோக |
ஜயஜயது சார்வங்க கருணா
நயனதிந்தலி நோடி ஜனுமா
மய ம்ருதிகளனு பரிஹரிஸு பக்தரிகெ பவதொளகெ ||
(ஹரிகதாம்ருதசாரம் 28-19)

'மொதலொந்திபெ நினகெ கணநாத' பொதுவாக இந்தப் பாடலையே கச்சேரிகளின் துவக்கத்தில் பாடுவது வழக்கம். காரணம்

‘பந்தவிக்ன களியோ கணநாத’. ஸ்ரீஹரியின் க்ருபைக்குப் பாத்திரரான கணபதிக்கு கிடைத்த இடம் இத்தகையது. இவனின் ஸ்ரீஹரி தனது விஸ்வம்பர மூர்த்தியை தரித்து, ஆகாசாதிபதி என்று அழைக்கப்படுகிறான். 18ம் வகுப்பில் வரும் இவரைக் குறித்து புரந்தரதாசர்:‘சதத கணநாத சித்தியனீவ கார்யதலி’ என்று பாடுகிறார்.

ஜகன்னாததாசர் தனது மேரு-கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தில், கணபதிக்காக ஒரு முழு சந்தியையும் ஒதுக்கி, 21 ஸ்லோகங்களில் இவனின் புகழினைப் பாடியிருக்கிறார்.

ஸ்ரீஷனங்க்ரி சரோஜப்ருங்க ம
ஹேஷ சம்பவ மன்மனதொளு ப்ர
காசிசனுதின ப்ரார்த்திசுவே, ப்ரேமாதிஷயதிந்த ।
நீ சலஹு சஜ்ஜனர வேத
வியாசகருணாபாத்ர மஹதா
காஷபதி கருணாளு கைபிடிதெம்மனுத்தரிசு ॥ (28-1)

இன்று ஜகன்னாததாசரின் ஹரிகதாம்ருதசாரத்தில் உள்ள விக்னேஸ்வர சந்தியை பாராயணம் செய்வது சிறந்தது.

விஜயதாசர்: ஷரணு கஜமுக ஷரணு ஆகுவாஹன ஷரணு சுரகுணசேவித ।
ஷரணு சகலாபீஷ்டதாயக ஷரணு விக்னவிநாயக ॥

ஜகன்னாததாசர்: லம்போதர ரக்தாம்பரதர அம்பராதீஷ்வர கௌரீகுமார ॥

ஸ்ரீவியாசராஜர்: கஜமுகனே சித்திதாயகனெ வந்திபெ ஷரணு ॥

ஸ்ரீமதாசார்யர், தனது தந்த்ரசார சங்க்ரஹத்தில், விநாயகரைப் பற்றி ‘க்ஷிப்ர ப்ரசாதாய நம:’ என்ற மந்திரத்தை சொல்லியிருக்கிறார்.

ஹரிதாச சாகித்யத்தில் அனைத்து தாசர்களும் விநாயகரைக் குறித்து எழுதிய பாடல்கள் உள்ளன.

**பாத்ரபத சுத்த பஞ்சமி**
**எப்போதும் நாமஸ்மரணை செய்வோம்.**

அனைத்து ஹரிதாசர்களும் சொல்வது இதுவே 'ஹரி ஸ்மரணே மாடோ நிரந்தர'. இதுவே சத்கதிக்கான வழி. நவவித பக்தியில் முதலாவது இதுவே. அனைத்திற்கும் மூலம் என்று புரந்தரதாசர்

சொல்வது 'ஸ்மரணே ஒந்தே சாலதே கோவிந்தன' என்பதையே. ஸ்ரீஹரியின் ஸ்மரணையை எந்த சந்தர்ப்பத்தில், எந்த இடத்தில் செய்யவேண்டும் என்று அனைத்து தாசர்களும் சொல்லியிருக்கின்றனர். ஒன்றிரண்டை பார்ப்போம்.

மக்களாடிசுவாக மடதியொள்
அக்கரதி நலிவாக ஹயப
ல்லக்கி மொதலாத வாஹனமேரி மெரெவாக |
பிக்குவாக ஆகளிசுதலி தே
வக்கிதனயன னெனெவுதிஹ னர
சிக்கனெமதூதரிகெ ஆவாவல்லி நோடுதிரு || (13-1)

இதே போல விஜயதாசர் கூறும் வாக்கினை கேட்டு நடக்க முயல்வோம். எப்போதும் வாயில் ஹரி நாமஸ்மரணை இருக்கட்டும்.

ஏளுவாகலி மத்தெ திருகி திருகுவாகலி
பீளுவாகலி நிந்து குள்ளிருவாகலி
கேளுவாகலி மாது கேளுவாகலி கரெது
பேளுவாகலி போகி சத்கர்ம மாடுவாகலி
பாளுவாகலி போஜன நானாஷட்ரஸ ஸ
ம்மேளனவாகலி மேலு புத்ராதி ஒடனொடனெ
கேளுவாகி மனுஜ மரியதெ தன்னய
நாலிகெ கொனெயல்லி தன்வந்திரி எந்து பொம்மெ
காலகாலதலி ஸ்மரிஸிதரெ அவகெ
வேளெவேளெகெ பஹு பவபீஜ பரிஹார
நீலமேகஷ்யாம விஜயவிட்டலரேய
ஒலக கொடுவனு முக்தர சங்கதலி || -- ஸ்ரீவிஜயதாசர்

இப்படி ஸ்ரீஹரி நாமஸ்மரணை வரவேண்டுமெனில், அவன் எப்போதும் நம் மனதில் தங்கியிருக்க வேண்டும். அதற்கு ஸ்ரீவியாசராஜர் கேட்டது இப்படி:

எந்தெந்தென்ன மனதிந்த அகலதிரு |
நந்தனந்தனெ ஆனந்த மூருதியே || -- ஸ்ரீவியாசராஜர்.

**பாத்ரபத சுத்த சஷ்டி**
**முக்ய பிராணா, நீ எந்தன் பிராணா**

ஸ்ரீகோபாலதாசர், பிராணதேவரிடம் கேட்டது; நம்மை கேட்கச் சொன்னது:

தாசோத்தமனே தயாபர ஹரிகா
பாசக பகுதர போஷ்யனெ யனகே நீ
ஈ ஷரீரதி ப்ரகாஷ மாடி ஞான
மாஸதெ பகவதுபாஸனெ மாடிஸோ || -- ஸ்ரீகோபாலதாசர்

வாயுதேவரிடம் என்ன கேட்கவேண்டும் என்று சொல்கிறார். ஏனெனில் ‘இவனு ஒலியலு ஹரியு ஒலிவ’. தாசர் தமது வாயுஸ்துதி க்ருதியில் வேண்டியது:

மூர்ஹத்து எரடு லக்ஷண உள்ளகாய
மூரவதார முக்ய ப்ராணராய
மூரெரடி ரூப முனிகுல ப்ரதீப
மூருகோடி ரூப மூரெரடதி லோப
மூரெண்டு தத்வேஷரிகெ நியாமக
மூரேளு ஸாவிர மூரெரடி நூர்மந்த்ர
மூரெந்தவஸ்தெலி ஜீவரிம் மாடிப
மூரொந்து ஷரீர வியாப்த நாராயண
மூருதி தூத அப்த மத்வராய
மூரு லோகவ பொத்த முகுதி ப்ரதாத || -- ஸ்ரீகோபாலதாசர்

ஜீவோத்தமரான வாயுதேவரின் முக்கிய லக்ஷணங்களை தெரிவிக்கும் தாசர், சர்வோத்தமனான ஸ்ரீஹரிக்கு இருக்கும்

அனுபவத்தை தெரிவிக்கிறார். என்னை ஸ்ரீஹரியின் தாசனாக்கி, எப்போதும் அவனை தியானிக்குமாறு செய் என்கிறார்.

நின்னாதீனவு ஜகத்து நீ ஹரியாதீன
யின்னார பலவு யனகில்லா
நின்ன ப்ரேரணெ யமகெ நினகெ ஹரி ப்ரேரணெ
நின்ன வலிமேவெ ஹரி வலிமெ
யன்ன பின்னப வந்தின்னு லாலிஸு பா
வன்ன புருஷன அச்சின்ன பக்தாக்ரணி
ஜன்மவெம்புதென்ன ஜொள்ளு மாடதெ சதா
நின்னொளு ஹரித்யானவன்னே விசார நீடோ || -- ஸ்ரீகோபாலதாசர்

'ஜயஜய ஜகத்ராண' என்று ஸ்ரீபாதராஜர் சொன்னது போல கோபாலதாசரும் - 'நம்ம த்ராண இல்லவு ஈதனு இல்லதிரெ | ப்ராணபதி கோபாலவிட்டலன | காணிஸே தோர்ப்ப கருணிய' என்றார்.

**பாத்ரபத சுத்த சப்தமி**

**குருவருள் மிக முக்கியம்**

ஸ்ரீமதாசார்யர் அனுவியாக்யானத்தில் 'குரு பிரசாதோ பலவான் ந தஸ்மாத் பலவத்தரம் சாதனம்' - வாழ்க்கையில் சாதனை செய்யவேண்டும் என்று விரும்புபவர்க்கு குருவருள் மிக முக்கியம் என்கிறார். குருவருளை விட முக்கியமானது வேறொன்றும் இல்லை. ஏனெனில், ஸ்ரீஹரியை, அவனது மகிமையை, தெரிவித்தவர் குருகளே ஆகையால். இதையே விஜயதாசர்:

குருபகுதி ப்ரதான சாதனா
குருபகுதி மஹாகர்மனாஷனா
குரு உஷதேஷவே ஞானமார்க
குரு பல ஒந்தே இத்தடம்
தரெ எல்ல கெலவக்கு அவாடம்
தரெ எல்ல கெலவக்கு அவாகம்
குரு ஒலிகொடெ சர்வ வித்ய ப்ராப்தி
குரு பதாம்புதி தாடிதனு

குரு விஜயவிட்டலரேயனு குருவில்லதவனிகெ ஒலியனு ||

பிரம்மாண்டத்திற்கு குரு என்றால் அது நாராயணனே. வேதவியாசாதி ரூபங்களினால் போதித்தான். இந்த நாராயணனே ஆணையிட்டு அனுப்பிய குரு என்றால், அது வாயுதேவரின் மூன்றாவது அவதாரமான ஸ்ரீமதானந்ததீர்த்தர். ஸ்ரீவாதிராஜர் ‘ஆசார்ய: பவனோ அஸ்மாகம்’ என்று வலியிறுத்தினார். ஸ்ரீபுரந்தரதாசர் ‘குருவின குலாமனாகுவ தனகா தொரெயதண்ண முகுதி’ என்றார்.

இதற்கு முக்கிய காரணம் ‘முகுந்த பக்த்யை குருபக்தி ஜாயை’ என்பதே.
குருராயர நம்பிரோ மாருதி எம்ப |
குருராயர நம்பி பிடதே யாவாகலு
துரித களெது சத்கதிய படெவரெல்ல || என்பதுடன்

‘ஸ்ரீமத்வாசார்யரே நம்ம குருகாணிரோ’ என்று பெருமையுடன் கூறினார்.

ஸ்ரீவாதிராஜர்:
குருபகுதி பேகு | ஹிரியர கருணபேகு |
ஹரிகதெகள நித்ய கேளுதிரபேகு |
விரகுதிபேகு | விஷ்ணுவின ஆராதனெ பேகு |
வர மந்த்ர ஜபபேகு | தப பேகு பரகதிகெ |
சிரிஹயவதனன பரமானுக்ரஹபேகு ||

இப்படி குரு உபதேசம் - ஆணையில்லாமல் எதுவும் நடக்காது. குரு கருணை மிகவும் முக்கியம் என்பது நமது பரம்பரையிலிருந்தே அறிந்துகொள்ளலாம்.

**பாத்ரபத சுத்த அஷ்டமி**
**அதிசயம் ஆனால் உண்மை**

கனகதாசர் உண்மையாகவே கனகர் (செல்வந்தர்). தமக்குத் தோன்றியதை நேரடியாக, அப்படியே மக்களின் முன்வைத்து, நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள் என்றார். எப்படியோ பிறந்து

எப்படியோ சாகிறது விலங்குகள். நாமும் அப்படி ஆகிவிடக்கூடாது என்கிறார்.

ஹலவு ஜனுமதி தாயி எனகித்த மொலெ ஹாவு
நலினலிது உம்பாக நலெகெ பித்துது குடி
அளியெ க்ஷீராம்புதிகிம் மிகிலு
ஹலவு பகெயலி அளுவ அஷ்ர்ஜலவனு குடி
அளிது நோடிதரெ அவணார்ணவகெ மூரு மடி
எலவுகள கூடிதரெ மேருவிகெ நால்குமடி
சுலிது சர்மவ ஹாஸிதரெ தரெகெ இது மடி
நெலெயாபுதே தேஹக்கெ || -- ஸ்ரீகனகதாசர்

கனகதாசரின் கற்பனையில் உண்மை இருக்கிறது. கூடவே நம் மகிமை இவ்வளவு இருக்கிறதா என்று ஆச்சரியமும் இருக்கிறது. நம் பிறவி எத்தகையது என்று மேலும் சொல்லிக் கொண்டே போகிறார்.

பத்தலிந்த பருதிஹரு பத்தலிந்த ஹோகுதிஹரு
கத்தலெ கால பெளகு கொத்தக களெதரு |
சத்தரில்ல ஹத்தரில்ல ஹொாத்தகொண்டு ஹோதரல்லெ
மத்தெ தேஹ மண்ணுகொடிதந்தெ கடலு பேட || -- ஸ்ரீகனகதாசர்

தினந்தோறும் இந்த தேகத்தினால் நாம் சந்திக்கும் பிரச்னைகள், குழப்பங்கள், சண்டைகள் ஒன்றா இரண்டா, ஆனால் இந்த தேகத்தின் நிலைமை இப்படி இருக்கிறது:

ஹுட்டுதேனு தரலில்ல சாயுதேனு ஒய்யலில்ல
சுட்டுசுட்டு சுண்ணத்ஹரளு ஆயிதே தேஹ |
அன்ன வஸ்த்ர போகக்காகி தன்ன சுகவ காணலில்ல
மண்ணுபாலு ஆதமேலே யாரிகாஹுதோ || -- ஸ்ரீகனகதாசர்

இந்த வாக்குகளை கேட்டு, சிந்தித்துப் பார்த்தால், வைராக்கியம் வராமல் போகாது. மேலும் இந்தப் பிறவியை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளவேண்டுமெனில், அதற்கான வழியைக் காட்டுகிறார்.

ஆரூ சங்கட பாஹோரில்ல சிரி நாராயணன ஸ்மரணெ நெரெபாஹோதல்லதெ ।
இதாகதித்தல்லி ஹேளுவரு ஸ்ருஷ்டியொளு காகிநெலெயாதி கேசவனங்க்ரி ।
முட்டி பஜிசித நரனு அவனே வானரனு ॥ -- ஸ்ரீகனகதாசர்

**பாத்ரபத சுத்த நவமி**
**ஸ்ரீஜகன்னாததாசரின் ஆராதனை**

ஜலஜேஷ்ட நிபாகாரம் ஜகதீஷ பதாஸ்ரயம் ।
ஜகதீதல விக்யாதம் ஜகன்னாத குரும்பஜே ॥

‘திளியனு எந்தெந்திகன்ய ரங்க ஒலித தாசரு ஜகன்மான்ய’ என்று பிராணேசதாசர் புகழ்ந்தால், ஸ்ரீதவிட்டலர் இவரை ‘சங்கசுகத பயஸி பதுகிரோ ரங்க ஒலித பாகவதர’ என்று கொண்டாடினார். தாச சதுஷ்டயரில் ஒருவரான ஜகன்னாததாசரின் வாழ்க்கைச் சரிதம் மற்றும் கிருதிகளைப் பற்றி அறிவதென்றால் அதுவே நம் பாக்கியம். அவற்றைப் படித்தால் அதுவே மோட்சத்திற்கான வழி. அதற்காகவே, ஸ்ரீனிவாசவிட்டலர் கூறிய விஷயம் இது:

நம்ம குருகள உக்தி சும்மனதலே நித்ய
ஒம்மென்ன ஸ்மரிபரிகெ பொம்மன பித
ஸ்ரீனிவாச விட்டலனு கம்மனெ தானே ஒலிவ நலிவா ॥

அன்றைய சமூகத்தில் மிகப் பிரபலமான வித்வாம்சர், ஸ்ரீனிவாசாசார்யர். சாஸ்திரங்களில் விற்பன்னர். அன்றைய பலராமாச்சாரிடம் (பின்னர் ஸ்ரீவரதேந்திரர்) பாடங்களைப் படித்து பின் தம் வீட்டிலேயே குருகுலத்தை நடத்தி வந்தார். காலக்கிரமத்தில் நடந்த சம்பவங்களில், விஜயதாசர் இவரை கோபாலதாசரின் மூலம் காப்பாற்றினார். ஆயுள்தானத்தைப் பெற்று பின்னர் பற்பல கிருதிகள், ஹரிகதாம்ருதசாரம் முதலான கிரந்தங்களை இயற்றினார். பின்னர் வந்த ஹரிதாச பரம்பரையே இவரை பாடிப் புகழ்ந்தது.

ப்ராணேஷதாசர்: திளியனு எந்தெந்திகன்ய ரங்க
ஒலித தாசரு ஜகன்மான்ய ॥

ஸ்ரீதவிட்டலர்: சங்கசுகவ பயஸி பதுகிரோ ரங்க ஒலிவ பாகவதர ||

குரு ஸ்ரீசவிட்டலர்: எந்து பொகளலி ஜகன்னாததாசரனு
கந்து பித ஒலிதவர அந்தரங்கதி பொளிவா ||

குரு ஜகன்னாததாசர்: ஜகதீதல விக்யாதம் ஜகதாமோத காரணம் |
ஜகதீஷ பதாசக்தம் ஜகன்னாத குரும்பஜே ||
தாசவர்யம் தயாயுக்தம் துரீக்ஷததுராசிஷம் |
ஹரிகதாம்ருதவக்தாரம் ஜகன்னாத குரும்பஜே ||

**பாத்ரபத சுத்த தசமி**

**பலனை எதிர்பார்க்காத செயல்கள்**

ஹகல நந்தா தீபதந்ததி
நிகமவேத்யன பூஜிசுத கை
முகிது நால்கரொளொந்து புருஷார்த்தவனு பேடதலெ |
ஜகதுதர கொட்டுதனு புஞ்ஜிஸி
மக மடதி ப்ராணேந்திரியாத்மா
திகளு பகவததீன வெந்தடிகடிகெ நெனெவுதிரு || (11-3)

'ஹரிய பஜிஸிரோ நரஹரிய பஜிஸிரோ' பொதுவாக இது அனைவருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் எப்படி பஜிக்க வேண்டும், பக்தி எப்படி செய்யவேண்டும், எப்படிப்பட்ட பலன்களை எதிர்பார்க்க வேண்டும் என்பதைப் பற்றிய தெளிவு நமக்கு இல்லை. இதற்கான பதில் அந்த மேலே இருக்கும் பாடல்.

ஈசாவாஸ்ய உபநிஷத்தில் 'தேன த்யக்தேன புஞ்சீதா மா கைத: கஸ்யஸ்வித் தனம்' யாரிடமும் எதையும் வேண்டாமல், செய்த நற்செயல்களை கிருஷ்ணார்ப்பணம் செய்து, பலனை எதிர்பார்க்காமல் திருப்தியாகி இருப்பது நிஷ்காம கர்ம (பலனை எதிர்ப்பார்க்காமல் இருப்பது).

ஸ்ரீஹரி கொடுத்ததை வைத்து மகிழ்வது, யாரிடமும் எதற்காகவும் எதையும் எதிர்பார்க்காமல் இருப்பது - இவையே ஸ்ரீஹரியை மகிழ்ச்சிக்குக் காரணம். இதுவே நிஷ்காம கர்மம் எனப்படுகிறது. தாசர் மேலே கொடுத்திருக்கும் உதாரணங்கள் சரியாகப்

பொருந்துகின்றன. ஸ்ரீஜகன்னாததாசர்

இதையே:
ஸோசித கர்மகளாசரிசுத பலு
நீசரல்லிகெ போகி யாசிசதே |

துச்ச விஷயகளன இச்சயிசதே ய
த்ருச்சா லாபதிம் ப்ரோச்சனாகுவுதே || பலவிது பாளுதக்கே (ஸ்ரீஜகன்னாததாசர்)

இப்படி நிஷ்காம கர்மங்களை பின்பற்றுபவர்களுக்கு மற்ற விஷயங்களைப் பற்றி வைராக்கியம் பெருகுகிறது. காரணம்:

ஸ்வயோக்யதெயொளகெ ஆயதவாதத்து
நோயதெ உணுவுதே நியாயத வைராக்ய || -- ஸ்ரீகோபாலதாசர்

புரந்தரதாசரும் இதைப் பற்றி சொல்வதாவது:
விஷயத விசார பிடு | விஹித கர்மவ மாடு |
வைராக்ய பாக்யவ பேடு ||

**பாத்ரபத சுத்த ஏகாதசி**
**அனைத்திற்கும் துவக்கம் - ஸ்ரவணம்**

ஒரு குருவிடமிருந்து, தெளிவான ஞானத்தை, அதன் பொருள் மற்றும் அனுசந்தானத்துடன் கேட்டு அறிந்து கொள்வது ஸ்ரவணம் எனப்படுகிறது. இதுவே அனைத்து சாதனைகளுக்கும் துவக்கம். இந்த ஸ்ரவணத்தைப் பற்றி ஸ்ரீவிஜயதாசர் ஒரு சுளாதியில் இவ்வாறு சொல்கிறார்:

ஸ்ரவணவெ மஹாமுக்ய கர்ம ஞானிகளிகெ
ஷ்ரவணவில்லதனக ஆவது தொரகது
ஷ்ரவணதிந்தலி சதத ஞான பகுதிவிரக்தி
ஸ்ரவணவெ ஸ்ரீஹரிய தாத்விக ப்ரஸா
தவனு மாடிகொட்டு முக்திகெ ஐதிபது
ஸ்ரவணவெ மங்களவு மூரு லோகக்கெ நித்ய
ஸ்ரவண மாடித மனுஜ சர்வதா பவித்ர

ஸ்ரவணா சக்தனிகெ பயபூககளில்லா
ஸ்ரவணானந்தக் ககாத கர்மங்களு
இவு சரியாகவு மருளெ மரளி மரளி எணிஸெ
ஷ்ரவணக்கெ ஒலிவ விஜயவிட்டலனங்க்ரி
நவநவநாமகள ஷ்ரவணமாடோ மனுஜ ||

ஸ்ரவணம் செய்வதால், ஸ்ரீஹரியிடம் பக்தி உண்டாகி, வளர்ந்து, விரக்தி பெற்று, லௌகீகத்தைப் பற்றிய வைராக்கியம் உண்டாகிறது. அதற்கே ஸ்ரீபுரந்தரதாசர்: 'அஸாரே கலு சம்சாரே சாராத்ஸாரதரோ ஹரி:' என்றார்.

இந்த சம்சாரம் தற்காலிகமானது என்று தெரியும்போது, ஸ்ரீஹரியே நமக்கு கதி என்று அறிந்து, அவனில் பக்தி உண்டாகி, நித்யசுகத்தில் அது முடிகிறது. ஆகவே, அனைத்து ஹரிதாசர்களின் ஒருமித்த குரல் / செய்தியாக: 'ஹரிகதா ஸ்ரவண மாடோ நிரந்தரா' என்று இருக்கிறது. 'ஸ்ரவணாதி வினான்யைவ திஷ்டேத் க்ஷணமபி க்வசித்' என்பதே முக்கியம்.

ஸ்ரீமதாசார்யர் கூறியதாவது:

ஸ்ருத்வாதர்மம் விக்ஞானாதி ஸ்ருத்வாத்யஜதி துர்மதிம் |
ஸ்ருத்வா ஞானமவாப்னோதி ஸ்ருத்வாமோக்ஷம் ச கச்சதி ||
(கிருஷ்ணாம்ருத மஹார்ணவம்)

ஸ்ரீஜகன்னாததாசர்:
ஸ்ரவண மனகானந்த வீவுது.. என்று கூறியிருக்கிறார்.

**பாத்ரபத சுத்த த்வாதசி**
**ஸ்ரீப்ரசன்னவேங்கடதாசரின் புண்யதினம்**

ஹரிதாச சாகித்ய உலகில் பிரசன்னவேங்கடதாசரின் பெயர் துருவ நட்சத்திரம் போல ஜொலிக்கிறது. தாச சதுஷ்டயருக்கு அடுத்ததான முக்கிய இடத்தைப் பிடித்து, சாகித்யத்திற்கு அனைத்து விதமான அலங்காரங்களையும் செய்த மகானுபாவர். திருப்பதி ஸ்ரீனிவாசன் இவரின் அத்யந்த பக்தியை மெச்சி அங்கிதத்தை வழங்கினான். பிறகு இவரது புனிதமான வாழ்க்கை, சஜ்ஜனர்களை

மேம்படுத்தியது. பாகவதம் பத்தாம் ஸ்கந்தம் (முதல் பாதியின்) மொழிபெயர்ப்பு, நீண்ட க்ருதிகள், சுளாதி, உகாபோகம், கீர்த்தனைகள் இப்படி 700க்கும் மேற்பட்ட க்ருதிகளை இயற்றியிருக்கிறார்.

பாகவத க்ருதியில், பாகவதர்களைப் பற்றி தாசர் கூறுவதாவது:
ஸ்ரோதவ்யவு இதெ மந்தவ்யவு இதெ த்யாதவ்யவு நமகெ |
பூதவு ஹரிகுணகாதெயு முகுதிய பாதேயவு நமகெ ||

நவவித பக்தியைப் பற்றிய ஒரு உகாபோகத்தில் இவ்வாறு கூறுகிறார். 'ஹரிய ஒம்பத்து பக்தி பல்ல தீரா, மரளி சம்ஸ்க்ருதியல்லி ஹுட்டி பாரா'.

ஹரிகதா ஸ்ரவணவு ஹரிநாம கீர்த்தனெ
ஹரிய ஸ்மரணெ ஹரிய பாதசேவனெ
ஹரிபூஜெ வந்தன தாஸ்ய சகத்வ
ஹரிகாத்மார்பணெ முகுதிபத தத்வ
ப்ரசன்னவேங்கட பரபொம்ம சித்த
குருமத்வமத ஸ்ருதிஸ்ம்ருதியொள் பிரசித்த ||

தாசரின் கிருதிகளில், தேவ-குரு ஸ்தோத்திரங்கள், தத்வ விசாரங்கள், சமூக நீதி, ஆத்ம சமர்ப்பணம், சாம்பிரதாயமான கீர்த்தனைகள் பலவகைகளாக உள்ளன. 'பிடேனோ நின்னங்க்ரி ஸ்ரீனிவாசா' இந்தப் பாடலை பாடாத பஜனா மண்டலி இல்லை. இவரின் கிருதிகள் காவிய மயமாக, தத்வங்களால் நிரம்பி இருப்பது விசேஷம். வாழ்க்கையில் ஸ்ரீஹரியின் கருணையால் பல்வேறு அற்புதங்களை நிகழ்த்தி, இறுதியில் பாதாமியில் ஆண்டு 1752 பாத்ரபத சுத்த ஏகாதசியன்று இறைவனடி சேர்ந்தார். மேலும் அவரது கிருதிகளில் சில:

சத்சங்கவிடிது சர்வோத்தமனெ கதியெந்து
நிச்செ அர்ச்சிஸு கட மனுஜ |
நாகஷயனன நாம கூகுவுதெ மஹயோக |
ஞானியாகபேகு அஞ்ஞான நீகபேகு தத்வ
ஞானதிந்திரபேகு முக்தி தானே ஆவாக்கு ||

**பாத்ரபத சுத்த த்ரயோதசி**

**பாகவதத்தின் மகிமை**

ஹரிதாசர்களுக்கும் வேதவியாசர் இயற்றிய பாகவதத்திற்கும் பிரிக்கமுடியாத சம்பந்தம் உள்ளது. அதில் உள்ள விஷயங்கள் அனைத்தையும் முழுமையாக எடுத்து விளக்கியவர்கள் ஹரிதாசர்கள். பாகவதத்தைப் பற்றி பேசுவது மற்றும் பாடுவதே ஹரிதாசர்களுக்கு வாழ்க்கையாக இருந்தது. இப்படி செய்வதால், அவர்கள் புனிதமாகி, அவர்களை பின்பற்றுபவர்களையும் புனிதமாக்கினர். அவர்களது வாழ்க்கை மற்றும் கிருதிகளின் மூலம் மேம்படுவதற்கான பாதையை சஜ்ஜனர்களுக்குக் காட்டினர். பாகவதத்தைப் பற்றி புரந்தரதாசர் கூறுவது:

ஹாளு ஹரட்டே மாடி மனவ । பீளு மாடிகொள்ள பேடி ।
ஏளு தினத கதெய கேளி । ஏளரய்ய வைகுண்டக்கே ॥

புராணங்களின் அரசன் பாகவதம் என்றார். சாத்விக புராணம், பகவந்தனின் சிறப்புகளை மிகவும் அழகாக வர்ணிக்கும் தத்வங்களின் சாரம், பகவந்தனின் மற்றும் பகவத் பக்தர்களின் மகிமைகளை வர்ணிக்கிறது பாகவதம். புரந்தரதாசர் மேலும்:

'ப்ரகட க்ரந்தகளெல்ல பாகவதத ஹிந்தே' என்றார். காரணம் இந்த கிரந்தம் 'பக்த்யா பாகவதம் சாஸ்திரம்' என்று புகழ்பெற்றிருக்கிறது. பாகவதத்தின் பத்தாம் ஸ்கந்தத்தை மொழிபெயர்த்த பிரசன்னவேங்கடதாசர் கூறுவது இது:

ஸ்ரோதவ்யவு இதே முந்தவ்யவு இதே த்யாதவ்யவு நமகே ।
பூதவு ஹரிகுணகாதெயு முகுதிய பாதேயவு நமகே ॥

'இதம் பாகவதம் நாம ப்ரஹ்மசம்ஹிதம்' என்ற புரந்தரதாசர் மேலும்:
தத்வவிவேகவு பாஹோது அந்தரவரிது
பாகவத கேளலு ஆஹோது ஞானபக்தி வைராக்யவு
சந்தத புரந்தரவிட்டலன சன்கீர்த்தன பாடலு
சகலவு பாஹோது சாயுஜ்ய ॥

ஜகன்னாததாசரின் வாக்கு மிகவும் பொருள் பொதிந்தது.

சிரிரமண தவசரண தொரகுவுது ஹ்யாங்கின்னு பரம பாபிஷ்ட நானு |
பாதராயண க்ருத பாகவத கேளலிகெ ஆதரவு புட்டலில்லா ||

வாழ்க்கையில் பாகவதத்தை கேட்காமல், படிக்காமல் ஒருவன் இருந்தால் என்ன? இல்லையென்றால் என்ன?. வேதவியாசர் சுத்த சாத்வீகராகி இயற்றிய இந்த சாஸ்திரத்தை, சுகாசாரியரின் மூலம் உலகத்திற்கு தெரியப்படுத்தினார்.

**பாத்ரபத சுத்த சதுர்தசி**
**பாகவதத்திற்கு சமம் இல்லை**

ஹரிசர்வோத்தமத்வத்தை, பகவத் பக்தர்களின் மகிமைகளை விளக்கி, ஞான பக்தி வைராக்யங்களை மேம்படுத்தி, அமிர்த தத்வங்களை கற்றுக்கொடுக்கும் பாகவதம், புராணங்களின் அரசன் மற்றும் மோட்ச சாஸ்திரம் என்று அழைக்கப்படுகிறது. வியாசர் இயற்றிய இந்த பாகவதத்தை ஹரிதாசர்கள், புகழ்ந்து பாடியிருக்கின்றனர். கிருஷ்ண லீலைகளை மிகவும் விசேஷமாக பாடியிருக்கின்றனர்.

'புராணேஷு து சர்வேஷு ஸ்ரீமத் பாகவதம் பரம்' என்றும் 'புராணானாம் சாரரூப:' என்றும், அனைத்து புராணங்களின் சாரமே பாகவதம் என்று கொண்டாடுகின்றனர். 'சகல புராணகளு பாகவதத ஹிந்தே' என்றனர்.

ஸ்ரீவாதிராஜர் பாகவதத்தைப் பற்றி பெருமையுடன் கூறுவது இப்படி.

பாகவத சாஸ்த்ரவே பஹு பாக்யவெந்தெந்து
நெரஹி பர்வதத நிலிசலெ |
பாகவத நிந்தகரெ பஹுனரகவெந்தெந்து சர்வ
தாக்ரதிம் துமகலெ |
அனுதினதி ஷ்ரவணமனனாதி சாதன மாடு ||

சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கும் சிறப்புகளை பட்டியிலிட்ட மோகனதாசர்:

மததொளு மத்வமத விரததொளு ஹரிதின
கதெயொளு பாகவதவென்னி கோலே ।
கதெயொளு பாகவதவென்னி இதரந்தெ
ப்ரதிமெயோள் விஷ்ணு ப்ரதிமென்னி கோலே ॥

ஸ்ரீஹரி எப்படி காட்சி கொடுப்பான் என்பதை ஜகன்னாததாசர்:
பாதராயணக்ருத பாகவத கேளுவுதக்கெ
ஆதரவு புட்டலில்ல ॥ என்று நம் கீழ்மையை எடுத்துரைக்கிறார்.

பாகவதத்தில் இருக்கும் 'யத்சூரயோ பாகவதம் வதந்தி' என்னும் வாக்கிற்கு, 'பகவந்தனின் மகிமைகளை, ஞானிகள், பாகவதம் என்று அழைத்தனர்' என்று பொருள்.

**பாத்ரபத பௌர்ணமி**

**தாரதம்யம் - (படிநிலை)**

புரந்தரதாசர்:
ஹரி சர்வோத்தம நித்ய தருவாய ரமாதேவி
தருவாய விதி ப்ராணரு
சரஸ்வதி பாரதி கருட அனந்த ருத்ர
தருவாய ஆறு தேவிகளு ॥

சௌபர்ணி வாருணிதெவி அபர்ணாதேவியரு சமரு
த்விபதி மன்வாதி தேவிகளு
ஈ பரி தாரதம்ய ஜபத்யானார்ச்சனெயிந்தெ
அபவர்கதன சேவெய மாடிரோ ॥

ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வ ஞானத்துடன், தாரதம்ய ஞானமும் அனைவரும் அறியவேண்டும். இதுவே முக்திக்கு வழி. இதையே ஸ்ரீமதாசார்யர்:

தாரதம்யம் ததோ ஞேயம் சர்வோச்சத்வம் ஹரே: ததா ।
ஏதத்வினா ந கஸ்யாபி விமுக்தி:ஸ்யாத் கதஞ்சன ॥

மேலும் 'ஸ்வபாவதத்ஸ்ரிதா ஜீவா உத்தமாதம மத்யமா:' - ஜீவர்களில் சாதாரணமாகவே உத்தம - அதம - மத்யம என்று மூன்று விதங்கள் உண்டு.

கோபாலதாசர்:
த்ரிவித ஜீவரு உண்டு த்ரிவித கர்மகளுண்டு ||

ஜகன்னாததாசர்:
தாரதம்யஞான முக்தி
த்வாரவெனிபுது கேளி சுகாப்தியொளு லோலாடுவுது ||

வியாசராஜர்:
வரதாரதம்ய பஞ்சபேத சத்யவெந்து |
நெரெபேளுவ வாயுவதத சுக்ஞானவனு ||

மோகனதாசர்:
தாரதம்ய பஞ்சபேத திளியதவரிகெ |
மாருதி ப்ரியா மோகனவிட்டல ஒலிய ||

வாதிராஜர்:
பரலோக சாதனக்கெ தாரதம்ய |
மதவெந்து கரளவனு பிடியலெ ||

விஜயதாசர்:
த்ருண ப்ராரம்பமாடி பரமேஷ்டி பரியந்த
கணனெவுண்டு கேளோ பொந்தொந்து பிரம்மாண்ட ||

கோபாலதாசர்:
த்ரிவித குணகளுண்டு த்ரிவித கார்யகளுண்டு
த்ரிவிததொள் ஒந்தொந்து த்ரிவித பகெய உண்டு
த்ரிவித ஜீவர கார்ய ஸ்ரீஹரி அதீன
த்ரிவிதரிந்தல்லி பின்ன த்ரிவித பாலக ||

ஸ்ரீபாதராஜர்:
நரோத்தமகதிக கந்தர்வரிகதிக |
சுரேந்த்ரகதிக ஹரகதிக |
விரிஞ்சிகதிக சிரிகதிக |

ஹரி சர்வோத்தம ||
ஹரிதாச சாகித்யத்தில் தாரதம்யம் - ஆரோகண மற்றும் அவரோகண என இரண்டு வகைகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

மோகனதாசர்:
ஹரியே சர்வோத்தம சிரியு ஆதன ராணி
சரஸிஜோத்பவ மாருத புத்ரரய்யா
சரஸ்வதி பாரதி கருட சேஷருத்ர
ஹரிய ராணியரு நாலெரடு மந்தி சௌ
பர்ணி வாருணி கிரிஜா சுரபதி காமாத்யர
தரதம்ய ஞானதிந்த திளியபேகு ||

ஸ்ரீமதாசார்யர் தமது தாத்பர்ய நிர்ணயத்தில் சொல்லிய தாரதம்யம் இவ்வாறு இருக்கிறது.

க்ஷிதிபா மனுஷ்ய கந்தர்வா தேவாஸ்ச பிதரஸ்சிரா: |
ஆஜானஜா: கர்மஜாஸ்ச தேவா இந்த்ர: புரந்தர: ||
ருத்ர: சரஸ்வதி வாயுர்முக்தா: ஷதகுணோத்தரா: |
ஏகோ ப்ராம்ஹச வாயுஸ்ச வீந்த்ரோ ருத்ரசமஸ்ததா ||
ஏகோ ருத்ரஸ்ததா சேஷோ ந கஸ்சித்வாயுனா சம: |
முக்தேஷு ஸ்ரீஸ்ததா வாயோ: சஹஸ்ரகுணிகா குணை: |
ததோS நந்தகுணோ விஷ்ணுர்னகஸ்சித் தத்ஸம: ஸதா ||

இதையே ஸ்ரீபுரந்தரதாசர் 'சத்ய ஜகதிது...' என்னும் பாடலில் மிகவும் சிறப்பாக பாடியுள்ளார்.

கோபாலதாசர்:
ஹரி சர்வோத்தம சிரி ஆதன ராணி |
பரமேஷ்டி மகனு, ஹர மொம்மக ஹரிகெ |
உரக மஞ்சவு இன்னு கருட ஏனோ ரதவு |
புருஹூத சுரரெல்ல பரிவாரவு ஹரிகெ ||

புரந்தரதாசர்:
மானுஷோத்தமரதிக க்ஷிதிபரு மனுஜ தேவகந்தர்வரு |
ஜான பிதரஜானஜகர்மரு உக்தசேஷ ஷதஸ்தரு ||

கணப மித்ரரு சப்த ரிஷிகளு வன்ஹி நாரத வருணரு |

இனஜகெ சம சந்திர சூர்யரு மருசுதெயு ஹெச்சு ப்ரவஹனு ||

தக்ஷ சம அனிருத்த குரு சசி ரதிஸ்வயம்புவ ரார்வரு |
கக்ஷ ப்ராணனிகிந்த காமனு கிஞ்சிதிததிகனு இந்த்ரனு ||

தேவேந்திரனிகிந்த மஹருத்ர சம சேஷ கருடரு |
கருடசேஷதிகரெனிபரு தேவி பாரதி சரஸ்வதி ||

வாயுவிகெ சமரில்ல ஜகதொளு வாயுதேவரே பிரம்மரு |
வாயுபிரம்மகெ கோடி குணதிந்த அதிகஷக்தளு ஸ்ரீரமா ||

அனந்த குணதிம் லகுமிகதிகனு ஸ்ரீபுரந்தரவிட்டலனு |
கன சமரு இவகில்ல ஜகதொளு ஹனுமஹ்ருத் பத்மவாசிகே ||
(ஸ்ரீபுரந்தரதாசர்)

பக்திம் க்ருத்வா அன்யதேவேஷு ப்ரஹ்மருத்ராதிகேஷ்வபி |
சர்வோத்கர்ஷமனிஞாய விஷ்ணோர்யாதி தமோ த்ருவம் ||

விஷ்ணுவை சர்வோத்தமன் என்று அறியாமல் பிரம்மருத்ரரை பக்தியுடன் வணங்குபவர்கள், தமஸ்ஸையே அடைவார்கள். 14விதமான தாரதம்யம் உள்ளது என்று சொல்லியிருக்கிறார்கள்.

1. அம்ச 2. ஆனந்த 3. பல 4. ஞான 5. தேஷ 6. கால 7. அபரோக்ஷ 8. லய 9. ஸ்ருஷ்டி 10. ஆவேஷ 11. குண 12. லக்ஷ்ண 13. காந்தி.

இதன்படியே தைத்யர்களிலும் தாரதம்யம் உள்ளது. ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஜகன்னாததாசர், தாரதம்யத்திற்காக ஐந்து சந்திகள் ஒதுக்கி விவரித்துள்ளார். ப்ருஹத், ஆரோகண, அவரோகண, அணு, கக்ஷ தாரதம்ய சந்தி என இதன் அனைத்து விஷயங்களை விளக்கியுள்ளார்.

**பாத்ரபத பகுள ப்ரதமை**
**ஷண்ணவதி பெயருடைய ஸ்ரீஹரி**

பித்ருகார்ய மற்றும் ஸ்ரீஹரியின் ரூபங்களைக் குறிக்கும் சொல்லாக 'ஷண்ணவதி' இருக்கிறது. ஷண்ணவதி என்னும் சொல்லால் புகழப்படுபவர் ஸ்ரீஹரி. இதை ஸ்ரீஜகன்னாததாசர்:

ஷண்ணவதி எம்பக்ஷரெடயனு
ஷண்ணவதி நாமதலி கரெசுத
தன்னவரு சத்பக்தி பூர்கதிந்த மாடுதிஹ ।
புண்யகர்மவ ஸ்வீகரிஸி கா
ருண்யசாகர சலஹுவனு பி
ம்மண்யதேவ பவாப்திபோத பஹுபிரகாரதலி ॥
(பித்ருகண சந்தி #9)

ஷண்னவதி என்னும் பெயரில் ஸ்ரீஹரி வசு, ருத்ர, ஆதித்யரில், மற்றும் பித்ரு காரியங்களில் சம்பந்தப்பட்ட கர்த்ரு, கர்ம, க்ரியைகளில் நிலைத்து அதிகாரிகள் செய்யும் சேவைகளை ஸ்வீகரித்து அவர்களின் பித்ருகளுக்கு அனந்த சுகத்தை கொடுக்கிறான். இதையே தாசர்:

பித்ருகெ தர்பகனெனிஸிகொம்
டதுள மஹிமனு ஷண்ணவதி நாமதலி நெலெசிஹனு ॥ (6-22)

இன்னொரு விதத்தில் ஷண்னவதி நாமக ஸ்ரீஹரி அனிருத்த என்னும் பெயரில் 93 ரூபத்தில் யஜமானரில் இருந்து, வசு, ருத்ர, ஆதித்யரில் அனிருத்த, பிரத்யும்ன, வாசுதேவ ரூபத்தில் இருந்து, பக்தியுடன் செய்யும் பித்ரு காரியங்களை ஸ்வீகரித்து பித்ருகளுக்கு சுகத்தை கொடுக்கிறான்.

ஷண்ணவதி நாமகனு வசு மூ
கண்ண பாஸ்கரரொளகெ நிந்து ப்ர
பன்னரனுதின நிஷ்கபட சத்பக்தியலி மாள்ப ।
புண்யகர்மவ ஸ்வீகரிஸி கா
ருண்யசாகர பித்ருகளிகெ அ
கண்ய சுகவித்தவர பொரெவனு எல்லகாலதலி ॥ (4-22)

ஷண்ணவதிகணனெ: அமாமனுயுகக்ராந்த த்ருதி:பாத மஹாலயா: ।
திஸ்ராஷ்டகா இமா: ப்ரோக்தா: ஷண்ணவத்ய: ப்ரகீர்த்திதா: ॥ -- ஸ்ம்ருதி

12 அமாவாசை. 12 வைத்ருதி. 14 மன்வாதி. 12 வியதீபாத. 4 யுகாதி. 15 மஹாலய. 12 சங்கிரமண. 15 அஷ்டக சிரார்த்த

(பாத்ரபத, மார்கசீர்ஷ, புஷ்ய, மாக, பால்குண - பகுள சப்தமி, அஷ்டமி & நவமி). மொத்தம் 96.

பித்ருனுத்திஷ்ய விப்ரேப்யோ தத்தம் ஷ்ராத்தமுதாஹ்ருதம் |

**பாத்ரபத பகுள த்விதியை**
**அபயம் அளித்து காப்பாயாக**

ஸ்ரீஹரியை 'பயக்ருத் பய நாசன:' என்று ஆகமங்கள் புகழ்கின்றன. சஜ்ஜனர்களுக்கு ஸ்ரீஹரி எப்போதும் அபய ப்ரதனாகவே இருக்கிறான். இதுவே அவனின் கருணை. எதையும் எதிர்பார்க்காத நண்பனான ஸ்ரீஹரி அனைவரையும் காப்பவன். புரந்தரதாசர் தமது கிருதியில் 'தயமாடோ' என்கிறார். இன்னொரு பொருளில் எப்போதும் எனக்கு 'உன் கருணைப் பார்வை வேண்டும்' என்கிறார்.

ஆனந்தபைரவி - அட்ட தாளம்
வெங்கடேச தயமாடோ வேதவேத்யனே |
பங்கஜாக்ஷ அபயவித்து ரக்ஷிசென்ன பேகனே ||ப||

சித்த சஞ்சலவ பிடிஸோ மத்தெ க்ரோதவ ஒடிஸோ
ப்ராந்தி விஷயங்கள பேட கந்துபித நாராயண ||1||
ஸ்ருஷ்டி மூரதொளகெ நீனெ கஷ்ட படிசுவரேனோ
நஷ்ட தன்ன நோடபேடோ த்ருஷ்டிஸி நோடோ தயாளோ ||2||
பாள அபராதி நானு நின்ன பளிகெ பந்தெ நானு
ஒலிது என்ன ரக்ஷிஸய்யா மேலுகிரி புரந்தரவிட்டலா ||3||

ஸ்ரீபுரந்தரதாசர் அவதாரமெடுத்து வந்து தம் சொந்த சாதனைகளை மட்டும் செய்து, சத்கதியைப் பெற்றிருக்கலாம். ஆனால் அவர் அப்படி இருக்கவில்லை. அவருடன் அனைத்து சஜ்ஜனர்களையும் அழைத்துப் போக விரும்பினார். அப்படியே நடந்தார். இறைவனின் வேண்டும் கலையை நமக்குக் கற்றுக் கொடுத்தார். ஒரு வழிகாட்டியாக இருந்து, பாதை போட்டுக் கொடுத்தார். இந்த மேற்கண்ட பாடலும் அதில் ஒன்று.

சஜ்ஜனர்களை காப்பாற்றுவதற்காகவே ஸ்ரீஹரி வைகுண்டத்திலிருந்து இறங்கி வந்து திருமலையில் நின்றான்.

இந்த திருமலேசனை தாசர் அழைத்த விதம் அலாதியானது. நண்பனை அழைப்பதுபோல 'தயமாடோ' என்று அழைக்கிறார். நான் தோஷம் உள்ளவன்; நீ தோஷம் அற்றவன். வேதவேத்யனான நீ என் கண்ணுக்கு தரிசனம் கொடு' என்றார். என்னை ரட்சிப்பாயாக என்று வேண்டினார். 'சித்தசஞ்சலவ பிடிஸோ; க்ரோதவ பிடிஸோ' என்றார். இவ்வளவு சொல்லிய தாசர் 'பாள அபராதி நானு' என்று சொல்லி, உன் தாசனான என்னை காப்பாற்று என்றார். இதுவே நாம் பின்பற்ற வேண்டிய வழியாகும்.

**பாத்ரபத பகுள த்ருதியை**

**ஹரி நாமஸ்மரணை**

ஹரி நின்ன நாமவ ஸ்மரிசலு துரித பீடிபுதுண்டே
அரிது பஜிபரிகில்லா கைவல்ய ஜோகெ
கருணவாந்து தன்ன மகன கூகிதவகெ
மரணகாலதி ஒதகித புரந்தரவிட்டலா ||

ஹரி நாமஸ்மரணை மட்டும் இருந்தால் போதாதா என்பதுபோல, எத்தகைய பிரச்னைகளையும் களையவல்ல சக்தி அதற்கு உண்டு. அஜாமிளனை மரணகாலத்தில் காப்பாற்றியது. ஆகவே, மனம் ஒரு நிலைப்பட்டு ஸ்ரீகிருஷ்ணனை நினைக்க முடியாவிட்டாலும், எப்படியாவது அவனை நினைத்தால் போதுமானது. ஆகவே தாசர்:

அணகந்திந்தாகலி டம்பதிந்தாகலி எத்தடாகலி பித்தடாகலி
தாகிதடாகலி தாகில்லதடாகலி மரெது மத்தொம்மெயாகலி
ஹரி ஹரி அம்பவனிகெ நரகத பயவேகே யமபட்டணகட்டெ
தரேனு யமபட்டண பட்டபயலாதரேனு
ஹரிதாசரிகெ புரந்தரவிட்டலா ||

இந்த கலியுகத்தில், யாகம், யக்ஞம், தவம் ஆகியவற்றை செய்வது சுலபமல்ல. பல தடைகள் வரும். ஆகவே ஹரி நாமஸ்மரணை மிகவும் சுலபமானது என்றனர்.

மனசஞ்சலதி தபவ மாடலஷக்யவு
கன அஞ்ஞானதி ஹலவு கர்மவு ஹத்தவு
தனஷுத்தியில்லத தானவு த்ருதா இவு

இனிதாத்தரிந்த புரந்தரவிட்டலா, ஈ யுகத
தன்ன ஸ்மரணெ லேசெந்தனு ||

இப்படியாக வேறு யுகங்களைவிட கலியுகத்தில் ஹரி நாமஸ்மரணை என்பது சாதனைக்கான வழி என்று சொல்கின்றனர்.

த்யானவு கிருதயுகதி, யக்ஞயாகவு த்ரேதாயுகதி
அர்ச்சனெ த்வாபரயுகதி, கீர்த்தனெ மாத்ரதி கலியுகதல்லி
முகுதியனீவ புரந்தரவிட்டலா ||

'நரனாத மேலே ஹரி நாம பென்னிஹொளகிரபேகு' என்றார் தாசர். கலியுகத்து சாதகர்களுக்கு ஸ்ரீஹரி கொடுத்த சுலபமான வழி - ஹரி நாமஸ்மரணை. இதனை பயன்படுத்தி, எப்போதும் ஹரி நாமஸ்மரணை செய்தால் அவனின் அருள் கண்டிப்பாகக் கிடைக்கும். ஏனென்றால் 'யோகக்ஷேமம் வஹாம்யஹம்' என்றான் ஸ்ரீகிருஷ்ணன்.

**பாத்ரபத பகுள சதுர்த்தி**

**ஹயவதனனே, காப்பாற்று!**

விருத்தனாதேனு பல்குளெல்ல பித்தவு கண்ண காணபாரது
வித்து நின்னலாரெனய்ய உத்தரிஸோ ஹயவதன |
தித்தி மனவ நின்ன பாதபத்மவ நெனெவந்தெ மாடோ
பொத்திதவர பொரெவ கருனாஸிந்து எனகெ நீனே பந்து
ஈகலு இன்யாவாகலு ஈ தனுவு போகதிரது || -- ஸ்ரீவாதிராஜர்

மனிதனின் நிலை இதுவே. நான் அஸ்வதந்த்ரன் - என்னால் எதுவும் செய்ய முடியவில்லை என்ற தொனி வருகிறது. 'அன்யதாசரணம் நாஸ்தி; த்வமேவ சரணம் மம' என்று ஸ்ரீஹரியின் சரணம் அடைகிறான்.

வலிமை இருக்கும்போது இறைவன் நினைவு வராது என்பது சகஜம். ஒவ்வொரு உறுப்பாக ஓய்ந்து போகும்போது, ஸ்ரீஹரியின் நினைவு வருகிறது. எப்படியோ பிறந்து வளர்ந்து பெரியவரான பிறகு, வாழ்க்கையின் சுமை புரிந்தபிறகு, பெண் மண் பொன்

ஆகியவற்றில் ஆசைப்பட்டு, அதைப் பெறுவதற்கான போராட்டம் தொடங்குகிறது. மனதில் காம, குரோதங்கள் நிரம்புகின்றன. நித்ய கர்மானுஷ்டானங்களைப் பற்றிய அறிவே இருப்பதில்லை. ஏமாற்று வழியிலேயே வாழ்க்கை செல்கிறது. இப்படியெல்லாம் இருந்தால் சத்கதி எப்படி கிடைக்கும்?

அதற்கே ராஜர், வயதான பிறகாவது அவனின் நினைவு வரட்டும் என்றார். 'உன்னை நினைக்குமாறு செய்' என்று வேண்டினார். இன்னொரு இடத்தில் 'நீ என் நண்பன் - என்றைக்கும் அருள்வாயாக' என்றார். அனைவருக்கும் வயது ஆகிக்கொண்டே போகிறது. அப்படியே ஆரோக்யமும் நிச்சயமல்ல. பிறகு வரும் நிலையை கணித்த ராஜர், 'தற்போதே நற்புத்தியைக் கொடுத்து காப்பாற்று, கருணைக்கடலே, என் நண்பனே' என்றார்.

ஞானிகளரசனே தயவிட்டு நின்னனு
த்யானிசுவந்தெ மாடோ ஹயவதன || --ஸ்ரீவாதிராஜர்

**பாத்ரபத பகுள பஞ்சமி**
**மானவ ஜென்ம தொட்டது**

ஸ்ரீபுரந்தரதாசரின் புகழ்பெற்ற கிருதி - 'மானவ ஜென்ம தொட்டது, இது ஹானி மாடலு பேடி, ஹுச்சப்ப களிரா'. இது நமக்குக் கொடுத்த எச்சரிக்கை வாக்கியம். இதற்கு ஒப்பாக ஸ்ரீஜகன்னாததாசர் சொல்வது:

சாதன சரீரவிது நீ தயதி கொட்டத்து
சாதாரணவல்ல சாது ப்ரியனே |
வேதவாதோதித ஜகன்னாதவிட்டலன
பாத பகுதிய கொட்டு மோத கொடு சதத ||

ஸ்ரீமத் பாகவதத்தில் பிரகலாதராஜர் சொன்னது இதற்கெல்லாம் முன்னோடி. 'துர்லபம் மானுஷம் ஜன்ம தத்த்யத்ருவமர்தமம்' என்கிறார்.

இந்த மனிதப்பிறவி அனந்தகோடி பிறவிகளுக்குப் பிறகு கிடைக்கும் நற்பேறு. அதற்கே புராணங்கள் 'தத்ராபி ஜன்ம

ஷதகோடிஷு மானவத்வம்' என்கின்றன. ஆனால், மனிதனின் நிலையை பிராணேச தாசர் இவ்வாறு கூறுகிறார்.

பேடுவரோ சுக பேடாரு கஷ்டவ ।
மாடாரோ அதர உபாயவா ।
ஜன பேடுவரோ சுகவா ॥ -- ஸ்ரீபிராணேசதாசர்

'சுகமிச்சந்தி யே மூடா நீச்சந்தி சுகசாதனம்' என்பது உண்மை. விஜயதாசர் கவலைப்பட்டு சொன்ன வாக்கு இது.

அனந்தஜனுமதல்லி அனந்த ஜீவிகள
யோனியோனிகளல்லி ஹீனாயதல்லித்து
ஏனு காணதெ பளலி நீனித்தரிந்த
ஞான ஒந்தாதரு நானரியலில்லா
அனந்தகுணபூர்ண விஜயவிட்டலன்ன
த்யானக்கெ தூராகி மானவாதமனாதெ ॥

ஆவ குலத புண்யவோ ஆவ சுக்ருதபலவோ
ஆவ ஜன்மதலி மாடித சித்தசாதனவோ
ஆவ தர்மதிந்தலி பந்த ஜனனவோ
பூதேவ கர்மதல்லி நீனவதரிஸி
கோவிதனாகி ஸ்ரீஹரிய நம்பதெ பரிதெ
தாவதியனு மாடினோவ நொந்து
ஆவ கடெகெ பொந்தததி வ்யர்த்த நம்மய்ய
ஸ்ரீ விஜயவிட்டலன பாவதலி காணே ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

இன்னு நானே பவதி யோனிமார்ககளொளகெ
பன்ன ஒடலாரென்யை பஹு விததலி ।
ஜன்ம ம்ருத்யு ஜராவியாதி துக்க பிடிஸி
சன்மார்க பொந்திசை புரந்தரவிட்டலா ॥

ஸ்ரீவாதிராஜர் கருணையுடன் கூறியது இது:
ஹலவு ஜனமதலி ஹரிய நெனெயலில்ல ।
கலிகளு ஆகி நீ கெடபேட மனுஜ ॥
நிஜஜாதியலி புட்டி அதமனாகிரபேட ।
பஜிசு பக்திகளிந்த மஹாமஹிம கிருஷ்ணர ॥

இத்தகைய மனிதப் பிறவியைப் பெற்ற நீ அதை வீணடிக்க வேண்டாம் என்று ஸ்ரீபுரந்தரதாசர் மிகவும் வருத்தப்பட்டு சொல்லும் வாக்கு:

ஏனு பந்தெனோ ஜீவவெ வ்யர்தவாகி |
ஞானதிந்தலி திளிது பரகதியனு கொடு ||

மனிதப்பிறவியின் சிறப்புகளைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாசர் கூறியது:
நரஜன்ம பருவுதே கஷ்ட
அதனரிது நோடலு விப்ரத்வவு ஸ்ரேஷ்ட
திருகி பாஹுதே உத்கிருஷ்ட - கேளிலவோ மர்கட ||

இதையே விஜயதாசரும்:
ஈ தேஹதலி ஞான ஈ தேஹதலி மான |
ஈ தேஹதலி நம்ம விஜயவிட்டலன காணோ||

**பாத்ரபத பகுள சஷ்டி**

**தாசரின் ஆறுதல் வசனம்**

ஹரிய சிரியருண சரசிஜ தளதவோலு
சரணயுகளவன்னு சிரதல்லிட்டு
மருதமதாம்புதியொளகித்து தத்வதா
த்வரிய தாரதம்யங்களன்னு க்ரஹிஸி
ஹரி பராபரனெந்து பரிபரியல்லி திளிது
பரிஷுத்தனாத வைண்டவனெனிஸி
புரௌஷேஷ்வரனாம விஜயவிட்டலனங்ரி எரகு
பெரெதாடு விவரகள பேடு || -- ஸ்ரீவிஜயதாசர்

மக்கள் எவ்வித தத்வங்களையும் அறியாமல் அறியாமையில் இருக்கிறார்கள் என ஹரிதாசர்கள், தமது கிருதிகள் மூலமாக அனைவரின் மனங்களில் விழிப்புணர்வை ஊட்டி மிகப்பெரிய உதவியை செய்தனர். தாசர்களின் ஆறுதல் வசனங்கள் இவ்வாறு இருக்கின்றன. இந்தப் பிறவியில் எவ்வளவு சாதனைகளை செய்யமுடியுமோ அவ்வளவு சாதனைகளை செய்துவிடு என்று அறிவுறுத்துகின்றனர் தாசர்கள்.

மனவே ಈ ஜனும தப்பித மேலே ஆவ சா
தனவு நிச்சயவல்ல விஜயவிட்டலன காணோ ||

இந்த சிறந்த மனிதப்பிறவி கிடைத்ததற்கு சாதனைகளை செய்தால் கிடைக்கும் பலன்களை விவரிக்கிறார். ஸ்ரீஹரியை வணங்குபவர்களை வணங்கினாலும் பலன் உண்டு என்கிறார் தாசர்.

வீரவைஷ்ணவனாகி துரிதவெ பரிஹார
மாரிகளு நிந்திரதெ போகுவுது
சாரிசாரிகெ நிஜதாசரனு சாரெ
சாரபரமகதி சம்சார வாரிதி
பாருகைசுவுது ஆசலமாடதெ
தாருணியொளு ஹரிசரணரிகெ படெயெ
பாரப்ருத் நாம விஜயவிட்டலன்ன
சேரிதவர பாத சேரலு நிர்வாண ||

ஹரிசர்வோத்தமனெந்து அரித தாசரிகெ நமிசு
வரருஹவிஜயவிட்டலனு ஒடனே இப்ப || -- ஸ்ரீவிஜயதாசர்

**பாத்ரபத பகுள சப்தமி**

**நல்ல நாள். நல்ல நேரம்.**

பொதுவாக மக்கள் எந்த வேலைக்கும் நல்ல நேரம் இருக்கிறதா என்று பார்க்கின்றனர். சுப காரியங்களுக்கு கண்டிப்பாக இது பார்க்கின்றனர். ஆனால், சில விஷயங்கள் நம்மால் செய்ய வேண்டியதாக இருக்கும்போது எந்தவொரு காரணத்தினாலும் அதை தாமதப்படுத்தக்கூடாது. நேரம் போய்விட்டால் பின்னர் எவ்வளவு வேண்டினாலும் கிடைக்காது. வராது. அதற்கே 'கைஹித இவ கேஷேஷு ம்ருத்யுனா தர்மமாசரேத்' என்றனர். மீனம் மேஷம் பார்க்கும் நிலை வேண்டாம். இதைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் சொன்ன வாக்கினை கேட்டு, அதன்படி நடப்போமாக.

இந்தின தினவு சுபதினவு
இந்திவ வார சுபவார

இந்தின தாரெ சுபதாரெ
இந்தின கரண சுபகரண
இந்திய யோக சுபயோக
இந்தின லக்ன சுபலக்ன
இந்து புரந்தரவிட்டல ராயன
பாடித தினவே சுபதினவு ||

அசலானந்தரின் சொல் இப்படியாக இருக்கிறது:
நாளே பாஹோது நமகிந்தே பரலி
இந்தே பாஹோது நமகீக்ஷணவே பரலி
ஈக பாஹோது நமகீக்ஷணவிரலி ||

'காளி பந்த கையலி தூரிகொள்ளிரோ' என்று, தர்ம காரியங்களுக்கு எப்போதும் கால நேரம் பார்க்கக்கூடாது என்றார். அதுபோல நமக்கு நல்லது நடந்தாலும், அதுவே நல்ல நாள், நல்ல லக்னம் எனவேண்டும். இது மனிதர்களுக்கு உற்சாகம் கொடுக்கக்கூடிய வார்த்தைகள். ஆகமொத்தம் வாழ்க்கையில் என்ன ஆனாலும் 'ஆதத்தெல்லா ஒளிதே ஆயித்து' என்னும் தாசரின் வாக்கினை நினைக்கவேண்டும். ஜகன்னாததாசரின் வாக்கியமும் இதே போல - சாதகர்களுக்கு உற்சாகத்தைக் கொடுக்கிறது.

சர்வதேஷவு புண்யதேசவு
சர்வகாலவு புண்யகாலவு
சர்வஜீவரு தானபாத்ரரு மூரு லோகதொளு |
சர்வமாதுகளெல்ல மந்த்ரவு
சர்வகெலசகளெல்ல பூஜெயு
சர்வவந்த்யன விமலமூர்த்தி த்யானவுள்ளவகெ || (10-4)

மொத்தத்தில் நற்செயல்களை செய்வதற்கு நாள், வாரம், நட்சத்திரம், தேச, காலம் என எதுவுமே முக்கியமில்லை என்று நினைக்கவேண்டும்.

**பாத்ரபத பகுள அஷ்டமி**

**தவறுகளுக்கு தண்டனை**

மனிதன் தன் வாழ்க்கையில் செய்யும் தவறான செயல்களுக்கு & செய்யக்கூடாது என்று சாஸ்திரங்களில் சொன்னதை செய்ததற்கு, 'அபராத' (குற்றம்) என்று பெயர். இவை தண்டனைக்கேற்றவை. அதாவது, எது தவறு என்பதை புரந்தரதாசர்:

மாடு எந்தத்தன்னு பிட்டரே அபராத
பேடவெந்தத்தன்னு மாடுவுது அபராத || என்றார்.

வேத சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விதிகளை செய்; அதில் செய்யக்கூடாது என்றவற்றை செய்யாதே. ஸ்ரீஹரியின் ஆணைகளே சாஸ்திரங்களாக இருக்கின்றன. 'ஸ்ருதி ஸ்ம்ருதிர் ஹரேராக்ஞே'. இந்த செய் - செய்யாதே என்பன வர்ணம் / ஆசிரமத்திற்குத் தகுந்தவை. இதிகாசத்தில் பெரியவர்களிடமிருந்து துவங்கி சாமான்யர் வரை செய்த தவறுகள் ஏராளமானவை. அதற்கான தண்டனைகளைப் பெறுவோரையும் பார்த்திருக்கிறோம். இதற்கான தீர்வு ஆத்மநிவேதனம். ஸ்ரீராஜர் சொல்வது இப்படி:

அபராதவென்னத்தெய்ய ஹே ஜீய
அபராதவென்னத்தெய்ய அபரிமிதவெ சரி
க்ருபெ மாடுதில்லவெ க்ருபணவத்ஸல கிருஷ்ணா ||

'அபராதி நான் இல்லை. இதெல்லாம் உன் நாடகமே' என்று புரந்தரதாசர் 'அபராதி நானல்லா; அபராத எனகில்லா' என்று ஸ்ரீஹரியிடம் முறையிடுகிறார்.

ஒந்தெண்டு பாகில பட்டணக்கெ தன
கெந்து இப்பத்தாரு மனெயாளுகளு
தந்து காவல நில்லிஸி என்ன நீ ஔகிட்டு
முந்தே பவதலி பாவணிபுதன்யாய ||

'அபராத சஹஸ்ராணி க்ரியந்தே அஹர்னிஷம் மயா | தானி சர்வாணி ஹே தேவ க்ஷ்மஸ்வ புருஷோத்தம ||'. எந்நேரமும்

நான் செய்துகொண்டிருக்கும் தவறுகளை கருணாமயியான நீ மன்னித்து காப்பாற்று என்று நாம் வேண்டவேண்டும்.

யததோSபி ஹரே: பதசம்ஸ்மரணே
சகலம் ஹ்யகமாஷு லயம் வ்ரஜதி ||
(த்வாதச ஸ்தோத்திரம் - ஸ்ரீமதாசார்யர்)

ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையே நம் அனைத்து பாவங்களையும் பரிகரிக்கவல்லது என்கிறார்.

பதிதரொளு என்னந்த பதிதரொப்பர காணே | கதியு நீனல்லதெ அன்யரில்ல |
பதிதபாவனெம்போ பிருதுண்டு மாடுவ | க்ஷிதிபதி ஸ்ரீகிருஷ்ணராய நீனுஹுதோ || -- ஸ்ரீவியாசராஜர்

**பாத்ரபத பகுள நவமி**

இவரே பகவத் பக்தர்

ரங்க நின்ன கொண்டாடுவா மங்களாத்மர
சங்க சுகவித்து காயோ கருணாசாகரா ||ப||

அரியரோ நீனல்லதே மத்தன்ய தெய்வர
மரெயரோ நீமாடித அனிமித்தோபகார
தொரெயரோ நின்னங்க்ரி சேவே ப்ரதிவாசர
அரியரோ பரதத்வவல்லதெ இதர விசார ||1||

மூகபதிரந்திப்பரோ நொள்ப ஜனகெ
காகுயுகுதிகளனு தாரதோ மனகெ
ஸ்வீகரிசரனர்பித ஒந்து காலகெ
ஆ கைவல்யபோக சுக அவரிகெ பேகே ||2||

ஜயாஜய லாபாலாப மானாபமான
பயாபய சுகதுக்க லோஷ்ப காஞ்சன
ப்ரியாப்ரிய நிந்தாஸ்துதிகளனுதின
ஸ்ரீயரஸன சிந்திசுவரோ நின்ன அதீன ||3||

ஈஷிதவ்யரெந்திப்ப தர்ம கர்மாசக்தரு
தேஷ காலோசித தர்ம கர்மாசக்தரு
ஆஷாக்ரோதலோப மோஹபாஷமுக்தரு
ஈ சுஜனரே ஷாபானுக்ரஹன சக்தரு ||4||

கண்ட கண்டல்லி விஷ்வரூபவ காம்பரோ
உண்டு உணிசித்தெல்லா நின்ன யக்ஞவெம்பரோ
பண்டுணியந்ததி நாமாம்ருத சவிதரோ
ஹெண்டிரு மக்களு தொண்டரெம்புவரோ ||5||

பிடரு தம்ம ஸ்வதர்மகளேனு பந்தரு
படரு தைன்ய ஒப்பரிகு லோகவந்த்யரு
பிடியரு நின்ன த்வேஷிகளிந்தேனு பந்தரு
கொடுவரு பேடிதிஷ்டார்த்த நித்யானந்தரு ||6||

நகுவரோ ரோதிசுவரோ நாட்யமாடுவரோ
பகெயரோ படதன பாக்ய பாகவதரு
தெகெயரோ நின்னல்லி மனவொம்மெ யாதரு
ஜகன்னாதவிட்டலா நின்னவரேனு தன்யரோ ||7||
--ஸ்ரீ ஜகன்னாததாசர்

**பாத்ரபத பகுள தசமி**
**அத்வைத த்ரய சிந்தனை**

பகவந்தனுக்கு சமம் என்றோ அவனைப்போல இன்னொருவரோ / இன்னொன்றோ இல்லை. அவன் ஸ்வகதபேத விவர்ஜிதன். அவனுக்கும் அவனது உறுப்புகளுக்கும், செயல்களுக்கும், குணங்களுக்கும் எந்தவிதமான வேறுபாடுகளும் இல்லை. பகவந்தனுக்கும் அவனது ரூபங்களுக்கும் வேறுபாடுகள் இல்லை. இதையே வேதங்கள் 'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்றன. இதையே தாசர் தமது நடையில் அழகாக விவரிக்கிறார்.

பாவாத்வைத க்ரியாத்வைத த்ரவ்யாத்வைத இவு மூரன்னெ
தேவனல்லி இப்பவெந்து அரிது நோடு
ஆவனல்லி சிந்திசு பிடதெ

காவகொல்லுவல்லி ஈவல்லி கொம்பல்லி
தாவதிகளல்லி சுலப சூக்மதல்லி
பாவ க்ரிய த்ரவ்ய தேவ தேவ எந்து
நீ விவேகதி நீச ஊச க்ரமதி
ஜீவிகளகதியு ஜேதவாகி அரிது
பாவசுத்ததல்லி பகுதி பூர்வகதிந்த
நீ ஒலிவொலிது திளிது ஒலிஸி ஒலிஸி பாடு
சேவ்ய சூத்ரவு நிந்த்ய நோவு தண்டனெயல்ல
தேவ பூஜ்ய எம்ப பாவ க்ரமவ களிஸி
ஆ விஷயதல்லி தேவதேவரன்ன சாவதானதி ஹூடுகி
பாவனாங்கனாகோ கோவிதர ப்ரிய கோபாலவிட்டலா
காவ நின்ன பிடதெ ஆவல்லி இத்தரோ || -- ஸ்ரீகோபாலதாசர்

சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரி எல்லா உறுப்புகளினாலும் எல்லா வேலைகளையும் செய்ய வல்லவனாக இருக்கிறான். அவனின் ஞானம், குணம், செயல்களில் வேறுபாடுகள் இல்லை என்று நினைக்கவேண்டும். அவனைவிட சிறந்தவர், அவனுடன் சமமானவர் வேறு யாரும் இல்லை. நித்யமுக்தளான லட்சுமிதேவியும் அவனைவிட இவற்றில் குறைந்தவள். ஸ்ரீஹரியின் இருப்பை ஸ்ரீவிஜயதாசர்:

அத்யணுமஹத்தாகிப்ப ஆகார குணதந்தெ ஔகிப்ப ஹொரகிப்ப பேரே பேரே இப்ப ஏகவாகி இப்ப வாரிஜ ஜாண்டக்கெ நிபிடவாகிப்ப என்று அவனது மகிமைகளைக் கொண்டாடியிருக்கிறார்.

**பாத்ரபத பகுள ஏகாதசி**

**பொறுமையே தவம்**

பொறுமை கடலினும் பெரிது - என்பது பொதுவாக அனைவரும் சொல்வதே. ஆனால் அதை பின்பற்றுவது அவ்வளவு சுலபமல்ல. இவ்வுலகிலும், மறு உலகிலும், நலனைவிட முக்கியமாக அனைவருக்கும் தேவை - பொறுமை. உலகத்தில் நடக்கக்கூடாதவை, பார்க்கக்கூடாதவை, கேட்கக் கூடாதவை என அனைத்தும் இந்த பொறுமையின்மையாலே ஆகின்றன என்று சொல்லலாம். பொறுமை இருப்பவனுக்கு எதிரிகள்

இருக்கமாட்டார்கள். அதிருப்தி, அவசரங்களுக்கு அவகாசம் இருக்காது. மனிதன் பொறுமை இழப்பது என்பதைப் பற்றி ஸ்ரீவாதிராஜர் கூறுகிறார். பொறுமையை ஒரு தவம் என்கிறார்.

பிலஹரி. ஜும்ப தாளம்.
தாளுவிகெகிந்த தபவு இல்லா ||ப||
கேளபல்லவரிகெ ஹேளுவேனு சொல்ல ||அப||

துஷ்டமனுஜரு பேள்வ நிஷ்டரத நுடி தாளு
கஷ்டபந்தரெ தாளு கங்கெடதெ தாளு
நெட்டசஸி பலபருவதனக ஷாந்திய தாளு
கட்டு புத்திய முந்தெ உணலுண்டு தாளு ||1||

ஹளிது ஹங்கிசுவ ஹகெய மாதனு தாளு
சுளிநுடி குஹக குமந்த்ரவனு தாளு
அளுகதலெ பிருஸு பிங்கத நுடிய நீ தாளு
ஹலதரானுஜனன்னு ஹ்ருதயதலி தாளு ||2||

நக்கு நுடிவர முந்தெ முக்கரிசதெ தாளு
அக்கசவ மாடுவர அக்கரதி தாளு
உக்கோஹாலிகெ நீரு இக்கெதந்ததி தாளு
பக்ஷேஷ ஹயவதன சரணெந்து தாளு ||3||

ஸ்ரீராஜர் இங்கு கொடுத்திருக்கும் பட்டியலில் விழாத மனிதரே இல்லை. பல வித பிரச்னைகளில் சிக்கி, பொறுமை குறைகின்றது. காம, க்ரோதாதிகள் அதிகமாகி, அதிருப்தியில் முடிகிறது. ஸ்ரீவாதிராஜர் அனைத்தையும் கவனித்து, எத்தகைய நிலையிலும் பொறுமையை இழக்காமல் மனதை ஒரு நிலையில் வைக்கவேண்டும் என்றார். அனைவரின் அனுபவங்களையே சொன்னார். அதற்காக, இந்த பொறுமையை ஒரு தவம் என்று கருதி, பின்பற்றி, பலனடையுங்கள் என்று உபதேசித்தார். இதனால், ஒரு மனிதன், குடும்பத்தில், சமூகத்தில் அமைதியாக வாழ்வது சாத்தியம். ஸ்ரீராஜர் இங்கு விளக்கியிருக்கும் தத்வங்கள் உண்மையே. இது எங்கேயும் எப்போதும் பலன் தரக்கூடியதே.

**பாத்ரபத பகுள த்வாதசி**

**ஏன் கவலைப்படுகிறாய்?**

எதிர்காலத்தை நினைத்து மனிதர்களுக்கு கவலை உண்டாகிறது. நம்மை காப்பாற்றுபவன் ஒருவன் இருக்கிறான் என்பதை மறந்தவர்களுக்கு கவலை பிறக்கிறது. உலகத்திற்கு ஹரிதாசர்கள் கொடுத்த செய்தி இதுவே. 'ரக்ஷகதீத்யேவ விஷ்வாஸ:'. 'ஹிந்தே முந்தே எட பலதி இந்திரேஷனு சலஹுவனு' என்றார் தாசர். சர்வசக்த - சர்வரக்ஷக ஸ்ரீஹரி இருக்கும்போது நமக்கு கவலை எதற்கு?

சிந்த்யாகே மாடதீதி சின்மயனித்யானெ ப்ராணி ||ப||
சிந்தாரத்னவெம்போ அனந்தனித்யானே ||அப||

எள்ளு மொனெய முள்ளு கொனெய
பொள்ளு பிடதெ ஔளகெ ஹொரகெ
எல்ல டாவினலி லகுமி நல்லனித்தானெ ப்ராணி ||1||
கோப்த த்ரிஜகத்வியாப்தாபஜகர ஆப்தனீனெனிஸி ஸ்தம்பதலி
ப்ராப்தனாத ப்ரஹ்லாதன பரமாப்தனித்தானே ப்ராணி ||2||

ஹிந்தே நன்ன சலஹிதராரு முந்தே நின்ன கொல்லுவராரு
எந்தெந்திகிந்திகெ கோவிந்தனித்தானே ப்ராணி ||3||
முக்கண்ண தேவர்களிகெ சிக்கதிருவ சிரியவரிய
சிக்கவரிகெ அசலபதவி தக்கிசித்தானே பிராணி ||4||

நானு நன்னதெம்புத பிட்டு ஹீன விஷயங்கள ஜரிது
ஞானகம்ய காயோ எனலு பூர்ணனித்தானே பிராணி ||5||
சுத்தலி பந்த துரிதகளெல்ல கத்தரிஸி கடிது ஹாகுவ
ஹத்த தாயி தந்தெ தவுது ஹத்திகனித்தனே ப்ராணி ||6||

பல்லித பஜகர ஹ்ருதயதல்லி நிந்து முத்துவிட்டல
சொல்லு சொல்லிகவர பயகெ சல்லிசுத்தித்தானே பிராணி ||7||

இங்கு பிராணி என்பது - அல்ப-சக்தியுடைய ஜீவர்களே. அஞ்ஞானியான அஸ்வதந்த்ரனான ஜீவனுக்கு பூர்ணானந்தம் எப்படி சாத்தியம்?. தகுதிக்கேற்ப அனைவரையும் அவனே

காப்பாற்றுவான் என்று சிந்தனை இருந்தால் வாழ்க்கையில் கவலை இல்லை. ஸ்ரீஹரி சின்மயன், அனந்தன். சர்வ வியாப்தன். ஆபத்பாந்தவன். அவனை நட்புடன், பக்தியுடன் அழைக்கும் வேலை நம்முடையதாக வேண்டும். உதாரணத்திற்கு: திரௌபதி, பிரகலாதன், கஜேந்திரன், அம்பரீஷன் ஆகியோரின் வரலாறு பார்க்கலாம்.

**பாத்ரபத பகுள த்ரயோதசி**

**அலை பாயும் மனது**

அனைவரின் மனமும் எப்போதும் அலைபாய்ந்து கொண்டே இருக்கிறது. இதற்கே ஸ்ரீகிருஷ்ணன் 'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:' என்றார். தாசர் 'மனவ நில்லிசலளவல்ல' என்றார். 'என் சித்தம் என் வசம் இல்லை' என்று விஜயதாசர் 'நின்ன சித்தக்கெ பந்துதனு மாடு சர்வேஷ' என்றார். மனதைப் பற்றி தாசர் கூறியது இவ்வாறு:

மனசு நில்லிசுவுது பஹள கஷ்ட
குணிசுவுது நிம்மொளகெ நீவே நெலெ பல்லவரு

துருளமன நிலிசுவுது சுரரிகளவல்ல ।
ஹாரி ஹாருவ மனசுனிலிசலளவல்ல ।
ஷரதிகளு போர்கரெவ த்வனிய நில்லிசபஹுது
சுரிவ பிருமளெயன்னு நில்லிசபஹுது
ஹரிதோடுவ மனசு நில்லிசலாரளவல்ல
சிரியரச விஜயவிட்டல தானே பல்லா ॥

ஸ்ரீமதாசார்யர் 'சஞ்சலோயம் மனோமீனோ' என்றால், ஸ்ரீகிருஷ்ணன் அர்ஜுனனுக்கு சொன்னது இவ்வாறு:

அசம்ஷயம் மஹாபாஹோ மனோர்னிக்கிரஹம் சலம் ।
அப்யாசேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ॥

இதையே ஸ்ரீவிஜயதாசர் 'விஷயத விசார பிடு, விஹித கர்மவ மாடு, வைராக்ய பாக்யபேகு' என்றார்.

இன்னொரு இடத்தில் இவரே:
ஔகித்த மனவே நின்னளவீக திளியது
கெளெய நீனாகு ஷுபாங்க விஜயவி
ட்டலன கூட பெரதாடு பரவச சாரோ ||

காரண பந்த மோக்ஷக்கே கார்ய காரண நீனு (மனது)
ஹாரி ஹாரி ஹோகதே சேரிகொண்டு என்னொளு
பாரமார்த்தவ பயசி வீரவிஜயவிட்டலன்ன
சேரி சததல்லி நோடு நோடு நோடு நோடு ||

**பாத்ரபத பகுள சதுர்தசி**

**கஜேந்திர மோக்ஷம்**

ஸ்ரீமத் பாகவத, எட்டாம் ஸ்கந்தத்தில் வரும் கஜேந்திர மோக்ஷத்தை ஹரிதாசர்கள் தங்களின் பல பாடல்களில் பாடியிருப்பதை காண்கிறோம். ஒரு விலங்கின் அழைப்பிற்கு, கூக்குரலுக்கு, ஸ்ரீஹரி பாய்ந்து வந்து காப்பாற்றிய சம்பவம். ஸ்ரீஹரியின் கருணையின் சிறப்பு என்ன என்பதை விளக்கும் சம்பவம் இது. வேறு வழியில்லாமல் கஜேந்திரன் 'நாராயணா அகிலகுரோ பகவன் நமஸ்தே' என்று வேண்டுகிறான். ஸ்ரீபுரந்தரதாசர், கஜேந்திர மோக்ஷத்தை 11 நுடிகளில் ஒரு பாடலாக இயற்றியிருக்கிறார்.

நாராயணா நமோ நாகேந்த்ர ஷயனாய
நாரதாத்யகிள முனினமித சரணாம்புஜ
ஸாரிதரெ பொரெவ கம்சாரி ரக்ஷிபுதெந்து
காருண்யதிந்தொலிது ஹரியே ||

'ஹரி ஸ்ம்ருதி: சர்வவிஷத் விமோக்ஷிணீ' என்று சொல்வதுபோல, ஸ்ரீவிஜயதாசர் – 'ஹரிநாம கஜேந்திரன ஆபத்து ஹரிஸிது' என்றார்.

தினமும் காலையில் எழுந்து கஜேந்திர மோக்ஷத்தை நினைக்கவேண்டும் என்ற விதி இருக்கிறது. கனகதாசர் தனக்கு தரிசனம் கொடு என்று உடுப்பி கிருஷ்ணனை வேண்டும்போது :

கரிராஜ கஷ்டதலி ஆதிமூலா எந்து
கரெயதாக்ஷண பந்து ஒதகிதேயோ நரஹரியே || என்றார்.

ஸ்ரீவாதிராஜர் 50 நுடிகளிலும், கனகதாசர் 47 நுடிகளிலும் கஜேந்திர மோக்ஷ கதையை பாடியிருக்கின்றனர்.

ஸ்ரீகோபாலதாசர் 'கரிய மொரெய கேளி சிரிகெ ஹோளதே பந்தே' என்றால் கிரியம்மா 'கருடவாஹனனேரி ககனதி சஞ்சரிசுத பந்து | சரசியொளு ஹரிய சலஹிதே' என்றார்.

ஹரிதாசர்கள் பகவத் பக்தர்களை பட்டியிலிடும்போது பிரகலாதன், த்ருவன் ஆகியோருடன் கஜேந்திரனையும் சேர்த்துக் கொள்வதை பல இடங்களில் பார்க்கிறோம். முன்னர் மகாஞானியாக இருந்த கஜேந்திரன் ஸ்ரீஹரியை வணங்கி, சர்வோத்தமா, குணபூர்ணனே, தோஷங்கள் அற்றவனே என்றெல்லாம் புகழ்ந்து பாடியிருந்தான்.

இப்படியாக கஜேந்திர மோட்ச சந்தர்ப்பத்தில், ஸ்ரீமதாசார்யர் அனைத்து வித ஆதாரங்களையும் விளக்கியிருக்கிறார். அனைத்து பக்தர்களும், வியாச தாச சாகித்யங்களில் சொல்லப்பட்டிருக்கும் கஜேந்திர மோட்சத்தை தினமும் நினைக்கவேண்டும். 'சக்ரேண நகவதனம் வினிபாட்ய தஸ்மாத் தப்ரக்ருஸ்ய பகவாஅன் கிருபயோஜ்ஜஹர' ||

**பாத்ரபத அமாவாசை**

**அணு தாரதம்யம்**

அனைத்து சாஸ்திர ஆகமங்களைப் படித்து ஸ்ரீமதாசார்யர் நமக்கு விளக்கியது - 'தாரதம்ய ஞானம் இல்லாமல் முக்தி கிடைக்காது' என்பதாகும். சித்தாந்தத்தின் முக்கிய விஷயமான தாரதம்யத்தின் சாரத்தை, ஜகன்னாததாசர் இரண்டே ஸ்லோகங்களில், தமது ஹரிகதாம்ருதசாரத்தில் விளக்கியிருக்கிறார். இந்த தாரதம்ய ஞானம், அபரோக்ஷ ஞானத்தின் மூலம் முக்தியை தரக்கூடியது. அனைத்து சஜ்ஜனர்களும் இதை மனப்பாடம் செய்து தினமும் பாராயணம் செய்யவேண்டும்.

நிருபம ஸ்ரீவிஷ்ணு லட்சுமி
சரசிஜோத்பவ வாயு வாணி
கருட ஷண்மஹிஷியரு பார்வதி ஷக்ர ஸ்மர ப்ராண ।
குரு பிருஹஸ்பதி ப்ரவஹ சூர்யனு
வருண நாரத வன்ஹி சப்தாங்
கிரரு மித்ர கனேஷ ப்ருது கங்கா ஸ்வஹா புதனு ॥

தருணிதனய ஷனைஸ்சரனு பு
ஷ்கர ஆஜானஜ சிரபிதரு கங்
தர்துரீர்வரு தேவ மானுஷ சக்ரவர்த்திகளு ।
நரரொளுத்தம மத்யமாதம
கரெசுவரு மத்யோத்தமரு ஈ
ரெரடு ஜன கைவல்ய மார்கஸ்தரெந்தானமிபே ॥
(ஹரிகதாம்ருதசாரம்: 21-55,56)

இந்த இரு ஸ்லோகங்களில் தாசர் அவரோஹணத்தில் தாரதம்யத்தை மிகவும் அழகாக, விளக்கி நமக்கு பெரும் உதவியை செய்திருக்கிறார். இதை அறிந்து படிப்பவர்களுக்கு ஸ்ரீஹரி புருஷார்த்தங்களைக் கொடுத்து, தரிசனத்தையும் கொடுக்கிறான் என்று தாசர் கூறுகிறார். அந்த பலன்களையும் இவ்வாறு விவரிக்கிறார்.

மாரனய்யன கருண பாரா
வார முக்ய சுபாத்ரரெனிப ச
ரோருஹாசன வாணிருத்ரேந்த்ராதி சுரனிகர ।
தாரம்யாத்மக சுபத்யக
ளாரு படசுவரா ஜனரிகெ ர
மாரமண பூரைசலீப்ஸித சர்வகாலதலி ॥ (32-54)

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**